மொழிபெயர்ப்பாளர்: **அ. கிருஷ்ணமூர்த்தி**
திருந்திய வடிவமைப்பாளர்: **நா. முகம்மது செரீபு**
ஓவியர்: **தி. துபீன்ஸ்கி**

А. Гайдар
**Чук и Гек**
*На языке тамили*

A. Gaidar
**Chuk and Gek**
*In Tamil*

இரண்டாவது திருந்திய பதிப்பு, 1989


சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

ISBN 5-05002333-5



ஒரு காலத்தில், நீல மலைத் தொடருக்குப் பக்கமாக இருந்த காட்டில் ஒரு மனிதன் வாழ்ந்து வந்தான். அவன் மிகவும் பாடுபட்டு உழைத்தான்; ஆனால் எப்போதும் தலைக்கு மேல் வேலை. விடுமுறை நாள்களில் வீட்டிற்குப் போகவும் அவனுக்கு நேரம் இல்லை.

பின்னர் குளிர்காலம் வரவே தனிமை உணர்ச்சி அவனை ஆட்கொண்டது. எனவே குழந்தைகளோடு வந்து தன்னைப் பார்க்கும்படி மனைவிக்குக் கடிதம் எழுதினான்.

அவனுக்கு இரண்டு பையன்கள். ஒருவன் பெயர் சுக், மற்றொருவன் பெயர் கெக்.

அவர்கள் தொலைதூர மிகப் பெரிய நகரம் ஒன்றில் தாயுடன் வாழ்ந்து வந்தனர். அதைவிட அழகான நகரம் உலகில் இடையவே கிடையாது.

இந்த நகரத்துக் கோபுரங்களின் உச்சியில் இரவும் பகலும் சிவப்பு நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டேயிருந்தன.

அந்த நகரம் மாஸ்கோ என்று சொல்லவும் வேண்டுமா?

ஒரு நாள் தபால்காரன் கடிதத்தோடு மாடிப்படியில் ஏறிவந்த போது, சுக்கும் கெக்கும் மல்லுக்கட்டிக் கொண்டிருந்தனர்.

அவர்கள் எதற்காகச் சண்டையிட்டனர் என்பது எனக்கு நினைவில்லை. ஒருகால் கெக்கின் வெற்று நெருப்புப் பெட்டியை சுக் எடுத்துக் கொண்டிருக்கலாம் அல்லது சுக்கினுடைய காலிப் 'பாலிஷ்' டப்பியைக் கெக் எடுத்துக் கொண்டிருக்கலாம்.

அண்ணனும் தம்பியும் ஆளுக்கு ஒரு குத்துவிட்டு விட்டு மறுமுறையும் குத்துவிடப் போன நேரத்தில் வாயில் மணி அடித்தது. அவர்கள் நடுங்கிப்போய் ஒருவரையொருவர் பார்த்தனர். அம்மா வந்துவிட்டதாகப் பயந்தனர். அவளோ மற்றத் தாய்களைப் போன்றவள் அல்லள். சண்டையிட்டுக் கொண்டதற்காக அவள் அவர்களைத் திட்டியது கிடையாது, அதட்டிக் கூச்சல் போட்டதும் கிடையாது. குறும்புக்கார இருவரையும் தனித்தனி அறைகளில் ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரத்திற்குப் பிரித்து வைத்திருப்பாள், சேர்ந்து விளையாட விடுவதில்லை. ஒரு மணி என்றால் சும்மாவா? டிக்-டிக், டிக்-டிக் என்று முழுதாக அறுபது நிமிடம் கழிய வேண்டுமே. இரண்டு மணி என்றாலோ இன்னும் அதிகம்.

அதனால்தான் பையன்கள் கண்ணில் வழிந்த நீரை நொடியில் துடைத்துக்கொண்டு, கதவைத் திறக்க ஓடினார்கள்.

வந்தது தாய் அல்ல, தபால்காரன். அவன் கையில் ஒரு கடிதம் இருந்ததைப் பார்த்தனர்.

''அப்பாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது! அப்பா விரைவில் வருவார், ஆகா, என்ன சந்தோஷம்!'' என்று கூச்சலிட்டனர்.

அவர்களுக்கு ஒரே கொண்டாட்டம்; சோபாவில் துள்ளிக்குதித்துக்



குட்டிக்கரணம் அடிக்கத் தொடங்கினர். உலகத்திலேயே மிகமிக அதிசயமான நகரம் மாஸ்கோ தான். இருந்தாலும் அப்பா ஆண்டு பூராவும் வீட்டில் இல்லாததால் இப்போது மாஸ்கோவிலுங்கூட அலுப்புத் தட்டக் கூடுமே.

ஒரே மகிழ்ச்சியாகவும் கொண்டாட்டமாகவும் இருந்ததால் அம்மா வந்ததைக்கூட அவர்கள் கவனிக்கவில்லை.

தனது செல்வ மகன்கள் மல்லாந்து படுத்து, கீச்சிட்டவாறு குதிகால்களால் சுவரை உதைத்த வேகத்தால் சோபாவுக்கு மேலே மாட்டியிருந்த படங்கள் அசைவதையும் சுவர்க் கடிகாரத்தின் சுருள் கம்பிகள் விண்ணென்று அதிர்வதையும் கண்டு தாயாருக்கு ஒரே ஆச்சரியம்.

ஆனால், இந்த ஆர்ப்பாட்டத்திற்கான காரணத்தைத் தெரிந்து கொண்ட பிறகு தாய் சிறுவர்களைத் திட்டவில்லை.

சோபாவிலிருந்து அவர்களை விரட்டினாள். மென்மயிர்த் தோல் அங்கியை ஒரே வீச்சில் கழற்றினாள்; கூந்தலில் படிந்திருந்த பனிச் சிதல்களை அகற்றக்கூட இல்லை; அவை உருகி, அவளது கருத்த

புருவங்களின் மேல் முத்துமணிகள் போல பளபளத்தன. விரைந்து கடிதத்தை எடுத்து படிக்கலானாள்.

கடிதங்கள் மகிழ்ச்சியையோ துக்கத்தையோ தரும் என்பது எல்லாருக்கும் தெரியும். ஆகவே தாய் படித்தபோது சுக்கும் கெக்கும் அவள் முகத்தையே ஊன்றிப் பார்த்தார்கள்.

முதலில் அவள் புருவத்தைச் சுளித்தாள், அவர்களும் சுளித்தார்கள். பிறகு அவள் முகத்தில் புன்சிரிப்பு அரும்பிற்று. ஆகவே கடிதம் மகிழ்ச்சியானது என்பதைப் பையன்கள் புரிந்து கொண்டார்கள்.

கடிதத்தை அப்பால் வைத்தபடி, ''உங்கள் அப்பா வரப் போவதில்லை. அவருக்கு வேலை அதிகம் இருக்கிறதாம், அதனால் அவர் இங்கே வரமுடியாதாம்'' என்று சொன்னாள்.

சுக்கும் கெக்கும் ஏமாற்றம் அடைந்து ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். கடிதம் மிகவும் துக்ககரமானது என்பது தெளிவா யிற்று.

அவர்கள் உதட்டைப் பிதுக்கினார்கள், மூக்கால் செருமினார்கள், தாயை முறைத்து முறைத்துப் பார்த்தார்கள். ஆனால் அவளோ புன்முறுவல் செய்து கொண்டிருந்தாள்.

''அவர் வரமாட்டார், ஆனால் நம்மை வந்து பார்க்கும்படி எழுதியிருக்கிறார்'' என்று தொடர்ந்தாள்.

சொன்னதுதான் தாமதம், சுக்கும் கெக்கும் சோபாவை விட்டுத் துள்ளிக் குதித்தார்கள்.

''அதிசய மனிதர்'' என்று சொல்லிப் பெருமூச்சுவிட்டாள் தாய். ''வந்து பாருங்கள் என்று எழுதுவது சுலபம்தான்—ஏதோ டிராமில் ஏறிச் சென்று விடலாம் போல...'' என்றாள்.

''அப்படியேதான்'' என்று சுருக்கெனச் சொன்னான் சுக். ''வா என்று அவர் சொன்னால், டிராமில் ஏறிப் போவோமே'' சேர்த்துக் கூறினான்.

''அட அசடே, அங்கே போக புகைவண்டியில் முதலில் ஓராயிரம் கிலோமீட்டர், பிறகு இன்னோர் ஆயிரம் கிலோமீட்டர் பயணம் செய்ய வேண்டும். பின்னர் சறுக்கு வண்டியில் ஏறித் தைகாக் காட்டின் வழியாகச் சவாரி செய்ய வேண்டும். தைகாவிலே ஓநாயோ கரடியோ



எதிர் வரலாம். என்ன அற்புதமான யோசனை! நீங்களே எண்ணிப் பாருங்கள்!'' எனக் கூறினாள் தாய்.

ஆனால், சுக்கும் கெக்கும் ஒரு நொடிகூட அதைப்பற்றி நினைக்கவில்லை. ஓராயிரம் அல்ல, நூறாயிரம் கிலோமீட்டர் வேண்டுமானாலும் போகத் தயார் என்றனர். அவர்களுக்கு எதைப்பற்றியும் அச்சமே கிடையாதே, துணிச்சல் அதிகமாயிற்றே. ஏன், நேற்றுகூட ஏதோ தற்செயலாய் வந்த பயங்கரமான நாயை அவர்கள் முற்றத்திலிருந்து கல்லால் அடித்து விரட்டி விடவில்லையா?

அவர்கள் மேலும் பேசிக்கொண்டே போனார்கள்; கைகளை வீசவும் கால்களால் தொப்புத் தொப்பென்று அடிக்கவும் துள்ள வும் செய்தனர்; தாய் மௌனமாக உட்கார்ந்து அவர்களுடைய ஆரவாரத்தைக் கேட்டுக் கொண்டிருந்தாள். திடீரென்று வயிறு

வலிக்கச் சிரித்தாள், பையன்கள் இருவரையும் கைகளால் வாரி யணைத்துத் தட்டாமாலை சுற்றி கடைசியாக சோபாவில் போட்டாள்.

ஒரு விஷயம் தெரியுமா? அவள் இந்த மாதிரிக் கடிதத்தை வெகுநாளாகவே எதிர்பார்த்திருந்தாள். சும்மாதான் சுக்கையும் கெக்கையும் சீண்டினாளே தவிர வேறொன்றுமில்லை, ஏனெனில் அவளுக்கு வேடிக்கையில் விருப்பம்.

* * *

அவர்களைப் பயணத்துக்கு ஆயத்தப்படுத்தத் தாய்க்கு ஒரு வாரம் பிடித்தது. சுக்கும் கெக்கும் கூட நேரத்தை வீணாக்கவில்லை.

பெரிய கத்தியால் சுக் ஒரு மரக் குத்துவாள் செய்துகொண்டான். கெக் மழமழப்பான ஒரு குச்சியை எடுத்து அதில் ஆணி அடித்தான்—ஈட்டி தயாராகிவிட்டது. அதுவும் எப்படிப்பட்ட ஈட்டி! எதையாவது கொண்டு கரடியின் தோலைத் துளைத்தபிறகு இந்த ஈட்டியை அதன் இதயத்துக்குள் செலுத்தினால், கரடி அந்தக் கணமே செத்து விழும் என்பதில் சந்தேகமே இல்லை.

கடைசியாக, ஆயத்தங்கள் எல்லாம் பூர்த்தியாயின. மூட்டை முடிச்சுகள் கட்டிவைக்கப்பட்டன. திருடர்கள் நுழையாமல் இருக்கும் பொருட்டு வெளிக்கதவுக்கு மேலும் ஒரு பூட்டுப் போடப்பட்டது. உணவு அலமாரியில் எலிகள் வராமலிருக்க ரொட்டித் துண்டுகள், சிதறிய மாவுத் துளிகள், தானியங்கள் ஆகியன துடைத்து எறியப்பட்டன. பிறகு பயணச் சீட்டு வாங்க தாய் ரயில் நிலையம் போனாள்.

அவள் போன உடனேயே சுக்கும் கெக்கும் வாய்ச் சண்டையில் இறங்கினர்.

பாவம்! அந்த வாய்ச் சண்டையால் என்ன துன்பம் நேரும் என்பதை அவர்கள் அறிந்திருந்தால், அன்றைக்குச் சச்சரவிட்டிருக்க மாட்டார்கள்!

சுக் சேகரிக்கும் தன்மையுள்ளவன். ஆகவே தட்டையான ஒரு தகர டப்பாவில் தேயிலைப் பொட்டணத்தின் மெல்லிய ஈயத்தாள், மிட்டாய் மடித்த தாள்கள், அம்புகள் செய்யச் சில காக்கை

இறகுகள், ஏதோ சீன வித்தைக்காகச் சில குதிரை மயிர்கள் ஆகியவற்றையும் இவை போல முக்கியமான வேறு பொருள் களையும் சேகரித்து வைத்திருந்தான்.

கெக்கிடம் அம்மாதிரி டப்பா கிடையாது. பொதுவாகவே அவன் பராக்குப் பார்ப்பவன். ஆனால் அவனுக்குப் பாட்டுப் பாடத் தெரியும்.

சமையலறையில் சுக் அருமையான டப்பாவிலிருந்த பொருள் களை ஒழுங்குபடுத்திக் கொண்டு இருந்தான்; அடுத்த அறையில் கெக் பாடிக் கொண்டிருந்தான்; அப்போது தபால்காரன் உள்ளே நுழைந்து தாய்க்கு வந்த தந்தியைச் சுக்கின் கையில் கொடுத்தான்.

சுக் தந்தியை டப்பாவில் வைத்துவிட்டு, கெக் ஏன் பாடுவதை நிறுத்திவிட்டு தேவையற்றுக் கூச்சல் போட்டுக் கொண்டிருக்கிறான் என்று பார்க்கப் போனான்.

என்ன செய்கிறான் என்பதை அறியும் ஆர்வத்தோடு, சுக் மெல்லக் கதவைத் திறந்தான். அவன் பார்த்த காட்சியினால் அவனுக்குச் சீற்றம் பொங்கிக் கைகள் நடுங்கத் தொடங்கின.

அறையின் நடுவில் ஒரு நாற்காலி கிடந்தது. அதன் பின்புறத்தில் ஒரு செய்தித்தாள் ஈட்டியினால் குத்தப்பட்டு முழுதும் கந்தல் கந்தலாய்க் கிழிந்து தொங்கியது. இது பரவாயில்லை. ஆனால் சனியன் பிடித்த கெக், தாய் செருப்புகள் வைத்திருந்த மஞ்சள்நிற அட்டைப் பெட்டியைக் கரடியாகப் பாவித்துக்கொண்டு, தன்னால் ஆனமட்டும் உக்கிரமாக ஈட்டியால் குத்திக் கொண்டேயிருந்தான்; அந்தப் பெட்டியில் சுக்கினுடைய தகர ஊதுகுழல், அக்டோபர் சோஷலிசப் புரட்சி விழாவுக்குரிய மூவர்ணச் சின்னங்கள், அவன் கெக்கைப் போல வீண்செலவு செய்யாமல் நீண்ட பயணத்துக்காகச் சேமித்து வைத்திருந்த பணம்—நாற்பத்தாறு கோப்பெக்குகள்—ஆகியன இருந்தன.

சல்லடையாகத் துளைக்கப்பட்ட அட்டைப் பெட்டியை சுக் பார்த்ததுமே, கெக்கினுடைய கையிலிருந்து ஈட்டியைப் பிடுங்கி முழங்கால் மேல் வைத்து முறித்துத் துண்டுகளைத் தரையில் வீசினான்.

ஆனால், கெக்கோ சுக்கின்மீது பருந்து போலப் பாய்ந்து, அவன் கையிலிருந்த தகர டப்பாவை வெடுக்கெனப் பிடுங்கி, சன்னல்

குறட்டின்மேல் தாவி ஏறி, டப்பாவை வெளியே எறிந்தான்.

இது சுக்கின் மனத்தில் சுருக்கெனத் தைத்தது. ''தந்தி! தந்தி!'' என்று தொண்டை கிழியக் கத்திக் கொண்டே, குல்லாயைக்கூடப் போட்டுக்கொள்ளாமல் வீட்டுக்கு வெளியே பாய்ந்து ஓடினான்.

ஏதோ கோளாறு என்பதைப் புரிந்துகொண்டு, கெக் அவனைத் தொடர்ந்து பறந்தான்.

யாரும் படிக்காத தந்தி வைக்கப்பட்டிருந்த டப்பாவை அவர்கள் எவ்வளவோ தேடியும் பயனில்லாது போயிற்று.

அது பனிக் குவியலில் விழுந்து ஆழமாய்ப் புதைந்திருக்க வேண்டும், அல்லது நடைபாதையில் விழுந்து, வழியில் போன யாரேனும் அதை எடுத்துக் கொண்டிருக்க வேண்டும். என்னவானாலும் சரி, படிக்கப்படாத தந்தியுடனும் மற்ற எல்லாச் செல்வங்களுடனும் டப்பா போனது போனதுதான்.



வீட்டுக்குள் வந்தபின் சுக்கும் கெக்கும் நீண்ட நேரம் மௌனம் சாதித்தனர். அதற்குள் சிநேகமாகிவிட்டனர், ஏனெனில் அம்மா இரண்டு பேருக்கும் சூடாய்க் கொடுப்பாள் என்பது அவர்களுக்குத் தெரிந்திருந்தது. கெக்கைவிட ஓராண்டு மூத்தவன் சுக், எனவே தனக்கு அதிகத் தண்டனை கிடைக்கும் என்று அஞ்சினான்.

''நான் சொல்வதைக் கேள், கெக்! அம்மாவுக்குத் தந்தியைப்பற்றி நாம் எதுவும் சொல்லாவிட்டால் என்ன? தந்தியாம் தந்தி, பிரமாதம்! அது இல்லாமலே தான் நாம் மகிழ்ச்சியாக இருக்கிறோமே!'' என்றான்.

''புளுகக் கூடாது. அது அம்மாவுக்கு அடங்காக் கோபத்தை உண்டாக்கும்'' என்று பெருமூச்செறிந்தான் கெக்.

''என் புளுக வேண்டும்?'' என்றான் சுக். ''தந்தி எங்கே என்று அம்மா கேட்டால், சொல்லுவோம். கேட்காவிட்டால் நாமாக முன் கூட்டியே எதற்காகச் சொல்ல வேண்டும்? நாம் உளறுபவர்கள் அல்லவே'' என்றான்.

''சரி'' என்று உடன்பட்டான் கெக். ''நாம் புளுக வேண்டியதில்லை என்றால், நீ சொல்லுகிறபடியே செய்வோம். அருமையான யோசனை, சுக்.''

அவர்கள் இதைத் தீர்மானித்து முடித்தபோது தாய் உள்ளே வந்தாள். வசதியான இருக்கைகளுக்குப் பயணச் சீட்டுகள் கிடைத்ததால் அவள் மிகவும் மகிழ்ச்சியாயிருந்தாள். ஆயினும், தனது அருமைப் பிள்ளைகளின் கவலை தோய்ந்த முகங்களையும் நீர்ததும்பிய கண்களையும் அவள் உடனே கவனித்து விட்டாள்.

மேலங்கியின் மீது படிந்த பூம்பனிகளை உதறிக்கொண்டு, ''நான் இல்லாதபோது எதற்காகச் சண்டை போட்டீர்கள்? சொல்லுங்கள், தம்பிகளா!'' என்றாள் தாய்.

''சண்டை ஒன்றும் போடவில்லையே'' என்று மழுப்பினான் சுக்.

''போடவேயில்லை'' என்று கெக் உறுதிப்படுத்தினான். ''நாங்கள் சண்டை போடத்தான் போனோம், ஆனால் போடாமல் இருப்பது ரொம்ப நல்லது என்று நினைத்தோம்'' என்றான்.

''அப்படி நினைப்பது எனக்கு மிகப் பிடித்தம்'' என்றாள் தாய்.

தனது மேலங்கியைக் கழற்றினாள்; சோபாவில் அமர்ந்து,

முடமுடப்பான பச்சைநிறப் பயணச் சீட்டுகளை—அவற்றில் ஒன்று பெரியது, இரண்டு சிறியவை—அவர்களுக்குக் காட்டினாள். விரைவில் மாலையுணவை முடித்துக் கொண்டனர். பிறகு இரைச்சல் அடங்கிற்று; விளக்குகள் அணைக்கப்பட்டன; எல்லாரும் தூக்கத்தில் ஆழ்ந்தனர்.

தாய்க்குத் தந்தியைப்பற்றி எதுவும் தெரியாது, எனவே அவள் அதுபற்றி ஒன்றும் கேட்கவில்லை.

* * *

மறுநாள் அவர்கள் புறப்பட்டனர். ஆனால், இரயில் நிலையத்தைவிட்டு இரவில் மிகவும் நேரங்கடந்து புறப்பட்டதால், சுக்கும் கெக்கும் சன்னல் வழியாக இருட்டைத் தவிர வேறு எதையும் பார்க்கவில்லை.



இரவில் தாகம் எடுக்கவே கெக் விழித்துக்கொண்டான். மேலே இருந்த விளக்கு அணைக்கப்பட்டிருந்தது. எனினும் மேசையின் வெள்ளைத் துணிமேல் குலுங்கிக் கொண்டிருந்த தம்ளர், இப்போது பச்சை நிறமாகக் காணப்பட்ட மஞ்சள் ஆரஞ்சுப் பழம், தூக்கத்தில் ஆழ்ந்த தாயின் முகம் எல்லாம் நீல ஒளியில் மூழ்கியிருந்தன. பனிச் சிதல்கள் படிந்த சன்னலின் வழியே கெக் சந்திரனைப் பார்த்தான். அது மாஸ்கோவில் பார்த்தது போல இல்லை, மிகப் பெரிதாயிருந்தது. மிக உயரமான மலைகள் மீது வண்டி விரைந்து போய்க் கொண்டிருந்தது, அதனால் சந்திரன் மிக அருகிலிருந்தது என்று அவனுக்கு உறுதி ஏற்பட்டது.

தாயை எழுப்பிச் சிறிது தண்ணீர் கேட்டான். ஏதோ காரணத்திற்காக அவனுக்குத் தண்ணீர் கொடுக்க மறுத்து, அதற்குப் பதில் ஓர் ஆரஞ்சுச் சுளை சாப்பிடும்படி சொன்னாள்.

கெக்குக்கு ஆத்திரம் வந்தது, ஆயினும் அரஞ்சுச் சுளையைப்



பிய்த்துத் தின்றான். இப்பொழுது அவனுக்குத் தூக்கம் பிடிக்க வில்லை. சுக்கை அசைத்து உலுக்கினான். சுக் கோபத்தோடு செரு மினானே தவிர விழித்துக் கொள்ளவில்லை.

பிறகு கெக் தனது கம்பளிக் காலணிகளை அணிந்து, கதவைத் திறந்து, நடைபாதைக்குள் சென்றான்.

அது நீண்ட குறுகிய நடைபாதை. சுவரோடு ஒட்டி, மடக்கு இருக்கைகள் அமைக்கப்பட்டிருந்தன; இருக்கையை விட்டு எழுந் ததுமே அது மடங்கி, தானாகவே டபக்கென்று சுவரோடு பொருந் திக்கொள்ளும். நடைபாதைப் பக்கமாக பத்துக் கதவுகள்; அவை எல்லாம் பளபளப்பானவை, சிவப்புநிறமானவை, பளிச்சிடும் பித்தளைப் பிடிகள் வைத்தவை.

கெக் முதலில் ஓர் இருக்கையில் அமர்ந்தான், பிறகு மற் றொன்றில், பிறகு வேறொன்றில். இந்த முறையில், பெட்டியின் கடைசிப் பகுதிவரை போனான். ஆனால் அந்த நேரத்தில், ஒரு கைவிளக்கோடு கார்டு உள்ளே வந்தார்; எல்லாரும் தூக்கத்தில் ஆழ்ந்திருந்த போது, அதிக இரைச்சல் ஏற்படுத்தியதற்காகக் கெக்கை அவர் அதட்டிக் கண்டித்தார்.

கார்டு போனதும், கெக் தனது அறைக்கு விரைந்து சென்றான். கதவைக் கஷ்டப்பட்டுத் திறந்தான். தாயை எழுப்பிவிடாதபடி மிக எச்சரிக்கையாக அதைச் சாத்தினான்; மெத்தென இருந்த படுக் கையில் தாவிக் குதித்தான். கொழுத்த சுக் படுக்கை முழுவதையும் வியாபித்துக் கொண்டிருந்தபடியால் அவனை ஒரு பக்கம் நகரச் செய்ய கெக் முட்டியால் இடித்தான்.

என்ன பயங்கரம்! சணல் முடியனும் உருண்டைத் தலையனு மான சுக்குக்குப் பதில், யாரோ மீசைக்காரனின் சினந்த முகம் கெக்கை உறுத்துப் பார்த்து, ‘‘யாரடா அது தள்ளுவது?’’ என்று கடுகடுப்புடன் உறுமியது.

கெக் தொண்டையைப் பிய்த்துக்கொண்டு அலறினான். எல்லாப் பயணிகளும் அரண்டு அவரவர் இடங்களிலிருந்து குதித்து இறங் கினர். விளக்கு போடப்பட்டது; தான் தவறான அறைக்குள் போய் விட்டதைக் கண்ட கெக் முன்னைவிட உரக்க வீரிட்டான்.

என்ன நேர்ந்தது என்பதை அறிந்த எல்லாரும் சிரித்தனர்.

இராணுவக் காற்சட்டையையும் மேற்சட்டையையும் அணிந்த மீசைக் காரர் கெக்கை அவனது அறைக்கு அழைத்துப் போனார்.

கெக் போர்வைக்கு அடியில் சுருண்டு படுத்து, அரற்றலை நிறுத்தினான். வண்டி ஆடி அசைந்தது, காற்று ஓவென்று இரைந்தது.

முன்கண்டிராத அளவு பெரிய அம்புலி, குலுங்கும் தம்ளர், வெள்ளைத் துணிமேல் கிடந்த ஆரஞ்சுப் பழம், தன் மகனுக்கு நேர்ந்த சங்கடத்தைப் பற்றி ஏதும் அறியாது தூக்கத்தில் எதற்காகவோ புன்முறுவல் செய்து கொண்டிருந்த தாயின் முகம் ஆகியவற்றின் மீது நீல ஒளியைப் பாய்ச்சியது.

கடைசியாக, கெக்கும் உறங்கிவிட்டான்...

... விந்தைக் கனவிலே
வண்டியும் உயிர்பெற்று
விரைந்து செல்ல,
சக்கரங்கள் தாமும்
சங்கதிகள் பேசின.

முதலாவது:

பாதையோ நீண்டது
போகுது இருளிலே,
முன்னே ஏகுவீர்
என்னரும் தோழரே!

இரண்டாவது:

விடியும் வரையில்
விளக்கே எரிவீர்
வெளிச்சம் தருவீர்!

மூன்றாவது:

நெருப்பே எரிந்திடு!
குழலே ஒலித்திடு!
விடிதிசை நோக்கியே
விரைவீர் சக்கரங்களே!

நான்காவது:

நீலமலை அடையவும்
நிம்மதி நமக்கே,
பேசவும் வேண்டாமே!



கெக் கண் விழித்தபோது, வண்டிச் சக்கரங்கள் இப்படிப் பாடுவது நின்று, ஒரே சீராகக் கடகடவென ஒலித்துக் கொண்டிருந்தன. பனியுறைந்த சன்னல்கள் வழியே சூரிய ஒளி வந்து கொண்டிருந்தது. படுக்கைகள் சரி செய்யப்பட்டன. சுக், முகங்கழுவித் துடைத்து, தலைவாரி, ஓர் ஆப்பிளைக் கறவித் தின்று கொண்டிருந்தான்; அப்போது, தாயும் மீசைக்காரப் படைவீரரும் கெக்கினுடைய இரவுநேரத் தீரச் செயல்களைப் பேசிச் சிரித்தபடி, திறந்த கதவருகில் நின்றனர். அந்தப் படைவீரர் தனக்குக் கொடுத்த ஒரு பென்சிலை கெக்குக்கு சுக் காட்டினான். அதன் முனையில் மஞ்சள்நிறத் தோட்டாக் குழாய் இருந்தது.

ஆனால் கெக் பொறாமைப்படவோ பேராசைப்படவோ இல்லை. அவன்தான் தன்னை மறந்து பராக்குப் பார்ப்பவன் ஆயிற்றே! இரவில் அவன் தவறான அறைக்குள் போனது மட்டும் அல்ல;

இப்பொழுதும், காற்சட்டையை வைத்த இடம் அவனுக்கு நினைவில்லை. ஆனால் பாடல்கள் பாடுவதில் அவன் கில்லாடி.

கெக், முகங்கழுவி, தாய்க்குக் காலைவணக்கம் சொல்லிவிட்டு, குளிர்ந்த சன்னல் கண்ணாடி மீது நெற்றியைப் பதித்து தாங்கள் கடந்து கொண்டிருந்த இடங்களையும் அங்கு வாழும் மக்கள் என்ன செய்கிறார்கள் என்பதையும் பார்க்கலானான்.

சுக், ஒவ்வோர் இடமாகச் சென்று பயணிகளோடு அறிமுகம் செய்துகொண்டான்; அவர்கள் அவனுக்கு பாட்டில் அடைக்கும் ரப்பர், ஆணி, கயிறுத் துண்டு போன்ற விதவிதமான சின்னஞ்சிறு பொருள்களை அன்பளிப்பாகக் கொடுத்தனர். இதற்கிடையே கெக் சன்னல் வழியே பலவற்றைப் பார்த்தான்.

அதோ ஒரு காட்டுக் குடிசை. அதிலிருந்து சட்டையும் பெரிய கம்பளிக் காலணிகளும் அணிந்த ஒரு சிறுவன் ஒரு பூனையுடன் வாசல்படியில் தத்திக் குதித்தான். ஒரே வீச்சு! பூனை, குட்டிக் கரணம் அடித்து, பொலபொல வென்றிருந்த பனிக் குவியலில் விழுந்து புதைந்தது; பின்பு தட்டித் தடவி வெளிவந்து, மெத் தென்ற வெண்பனியில் துள்ளியோடியது. பையன் ஏன் அந்தப் பூனையை அம்மாதிரி வீசி எறிந்தான்? ஒருகால் மேசையிலிருந்த உணவைத் திருடியிருக்குமோ?

மறுகணமே அந்தக் குடிசை, சிறுவன், பூனை—எல்லாம் போய்விட்டன. அடுத்து வயலில் ஒரு தொழிற்சாலை தெரிந்தது.





பனிபடர்ந்த வயல் வெள்ளைநிறம், தொழிற்சாலையின் புகை போக்கிகள் சிவப்புநிறம், புகையோ கறுப்பு. சன்னல்களில் பிர காசித்த விளக்குகளோ மஞ்சள் நிறம். அந்தத் தொழிற்சாலையில் என்ன செய்தனர்? அங்கு ஒரு காவல்வீடு இருந்தது, அதன் அருகில் ஆட்டுத்தோல் அங்கியுடன் ஒரு காவலாள் நின்று கொண்டிருந் தான். அங்கி அவன் வடிவத்தை மிகப் பெரிதாகக் காட்டியதால் அவன் கையில் பிடித்திருந்த துப்பாக்கி மெல்லிய துரும்பு போலத் தெரிந்தது. ஆனாலும் அருகே போனால் ஆபத்துத்தான்.

பிறகு ஒரு காடு வந்தது; அது நடனம் புரிவதுபோலத் தெரிந்தது. அருகில் உள்ள மரங்கள் விரைவாகக் குதித்தன; தொலைவில் உள்ளவை, அமைதியாகச் செல்லும் வெண்பனி ஆற் றில் அடித்துச் செல்லப்படுவன போல ஆடி அசைந்தன.

கெக் சுக்கை அழைத்தான்; சுக் அப்பொழுதுதான் அன்பளிப்புக் களை நிறையச் சேர்த்துக்கொண்டு தன் அறைக்கு வந்திருந்தான். இப்போது இருவரும் ஒன்றாக வெளியே பார்க்கத் தொடங்கினர்.

புகைவண்டி வெகு வேகமாக ஒளிமயமான பெரிய நிலையங் களைக் கடந்து சென்றது. அந்நிலையங்களில் நூற்றுக்குக் குறையாத என்ஜின்கள் குப் குப் பென்று புகை விட்டுக்கொண்டு, முன்னும் பின்னுமாக நகர்ந்து கொண்டிருந்தன. சின்னஞ்சிறு நிலையங்களையும் புகைவண்டி கடந்து சென்றது; அவை மாஸ்கோ

வில் அவர்கள் வீட்டுக்கு அருகே, தெரு மூலையில் உள்ள பலசரக்குக் கடையைவிடக் கொஞ்சமும் பெரியனவல்ல.

கனியம், நிலக்கரி, வண்டிப் பெட்டியின் பாதியளவுள்ள பெரும்பெரும் கட்டைகள் ஏற்றப்பட்ட புகைவண்டிகள் எதிர்ப்புறம் கடந்து சென்றன.

ஓரிடத்தில் பசுக்களும் காளைகளும் நிறைந்த ஒரு ரயிலைத் தாண்டிச் சென்றனர். அதனது என்ஜின் பாங்கற்றது, நுண்ணிய கீச்சென்ற ஒலியுடன் ஊதுவது. திடீரென்று காளைகளில் ஒன்று உரக்க உக்காரமிடவே, என்ஜின் ஓட்டுநர்கூடத் திரும்பிப் பார்த்தார்; ஒருவேளை தனக்குப் பின்னால் பெரிய என்ஜின் ஏதேனும் வருகிறதோ என்று அவர் நினைத்திருக்கலாம்.

ஒரு சிறிய நிலையத்தில் பிளாட்பாரத்தின் ஒரு பக்கத்தில் இரும்புக் கவசமிட்ட ரயில் நின்று கொண்டிருந்தது. பிளாட்பாரத்தின் மறுபுறம் அவர்களுடைய வண்டி போய் நின்றது.

கித்தான் துணியால் மூடப்பட்ட பீரங்கிகள் அதன் எல்லாப் பக்கங்களிலும், பயங்கரமாகத் துருத்திக் கொண்டிருந்தன. ரயிலைச் சுற்றிலும் செஞ்சேனை வீரர்கள் நின்றனர்; அவர்கள் சிரித்துக் கொண்டும் கதகதப்புக்காகப் பாதங்களை ஓங்கி மிதித்துக் கொண்டும் வட்ட உறைகளணிந்த கைகளைக் கொட்டிக்கொண்டும் இருந்தனர்.

தோல் அங்கி அணிந்த ஒருவன் அந்தக் கவச ரயிலுக்கு அருகில் மௌனமாக ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவாறு நின்றான். நிச்





சயமாக இவன்தான் அந்தப் படைத் தலைவன் என்று சுக்கும் கெக்கும் முடிவு செய்தனர்.

ஆம், அவர்கள் வழி நெடுகிலும் பல காட்சிகளைப் பார்த்தனர். ஆனால் துரதிருஷ்டமாக வெளியில் புயல் வீசிக் கொண்டிருந்தது, சன்னல்களில் அடிக்கடி பனி படிந்தது.

கடைசியாக, ஒரு காலை நேரத்தில், ரயில் ஒரு சிறிய நிலையத் திற்கு வந்து சேர்ந்தது.

சுக், கெக், மற்றும் மூட்டைமுடிச்சுகளுடன் தாய் பிளாட்பாரத்தில் இறங்கவுமே வண்டி புறப்பட்டுவிட்டது.

மூட்டைகள் வெண்பனியில் அடுக்கப்பட்டன. விரைவில் பிளாட் பாரம் வெறிச்சோடிப்போனது. ஆனால், தந்தை அங்கு வரவில்லை.

தாய்க்குத் தந்தைமீது கோபம். மூட்டைகளைப் பார்த்துக் கொள்ளும்படி குழந்தைகளிடம் சொல்லி விட்டு, தங்களுக்காக

அனுப்பப்பட்ட சறுக்கு வண்டி எது என்பதைக் கண்டுபிடிக்க வண்டிக்காரர்களிடம் சென்றாள்; ஏனெனில் தந்தை வசித்த இடத்திற்குப் போக தைகாக் காட்டுவழியே நூறு கிலோமீட்டர் சறுக்கு வண்டியில் செல்ல வேண்டியிருந்தது.

தாய் திரும்பிவர அதிக நேரமானது. இதற்கிடையே பயமுறுத்தும் தோற்றமுடைய ஒரு வெள்ளாடு வந்தது. முதலில் அது குளிர்ந்து கிடந்த கட்டையின் பட்டையைக் கடித்துக் குதறியது; பிறகு அருவருப்பாகக் கத்திக் கொண்டே சுக்கையும் கெக்கையும் வெறித்துப் பார்க்கத் தொடங்கியது.

சுக்கும் கெக்கும் மூட்டைகளுக்குப் பின்னால் விரைந்து ஓடி மறைந்து கொண்டனர். ஆமாம், இந்தப் பகுதிகளில் உள்ள வெள்ளாடுகளுக்கு என்ன வேண்டும் என்று யார் கண்டது?

தாய் திரும்பிவந்த போது அவளது முகமோ மிகவும் வாடியிருந்தது. தாங்கள் வரப் போவதாக அடித்த தந்தி தந்தைக்குக் கிடைக்கவில்லை போலும் என்றும், எனவேதான் தங்களுக்காக





அவர் ரயில் நிலையத்திற்கு சறுக்கு வண்டி அனுப்பவில்லை என்றும் அவள் சொன்னாள்.

ஒரு சறுக்கு வண்டிக்காரனை அவர்கள் கூப்பிட்டனர். அவன் தனது நீண்ட சாட்டையினால் வெள்ளாட்டு முதுகின்மேல் ஒரு வீசு வீசினான்; பிறகு மூட்டைகளை ஒன்றொன்றாக எடுத்து, ரயில் நிலையச் சிற்றுண்டிச்சாலைக்குக் கொண்டுபோனான்.

சிற்றுண்டிச்சாலை மிகவும் சிறியது. கவுண்டருக்கு பின்னால், சுக் அளவுக்கு உயரமான பருத்த சமோவார் புகையைக் கக்கிக் கொண்டிருந்தது; அது நடுங்கியது, சீறியது, அதன் நீராவிப் படலம் மேல் நோக்கி மேகம் போலக் கிளம்பியது; கதகதப்புக்காக அங்கே அண்டியிருந்த ஒரு சில அடைக்கலக் குருவிகள் கீச்சிட்டுக் கொண் டிருந்தன.

சுக்கும் கெக்கும் தேநீர் அருந்திக் கொண்டிருக்கையில், தாய் சறுக்கு வண்டிக்காரனோடு பேரம் பேசினாள். அவர்கள் போக வேண்டிய இடத்திற்குத் தைகாக் காட்டு வழியாகச் செல்ல வண்

டிக்காரன் மிகப் பெரிய தொகை—அதாவது நூறு ரூபிள் கள்—வாடகை கேட்டான். தூரம் அதிகந்தான்.

கடைசியில் பேரம் முடிந்தது; ரொட்டி, தீனிப்புல், ஆட்டுத்தோல் அங்கி ஆகியவற்றை எடுத்து வருவதற்காக வண்டிக்காரன் வீட்டுக்குப் போனான்.

''நாம் வந்தது கூடத் தந்தைக்குத் தெரியாது. நம்மைப் பார்க்க அவருக்கு ஒரே வியப்பாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கும்!'' என்றாள் தாய்.

''ஆமாம், அப்படித்தான்; எனக்கும் கூட வியப்பும் மகிழ்ச்சி யுமாக இருக்கும்'' என்று தேநீர் குடித்துக்கொண்டே ஆழ்ந்த நிதானத்துடன் சுக் சொன்னான்.

''எனக்குங்கூட. என்ன செய்யவேண்டும், தெரியுமா—நாம் சத்தமில்லாமல் வண்டியை ஓட்டிக் கொண்டு போய், அப்பா எங்கேனும் வெளியில் போயிருந்தால், மூட்டைகளை மறைத்து





வைத்துவிட்டுப் படுக்கைக்கு அடியில் நுழைந்து கொள்ளலாம். அவர் உள்ளே வந்து, உட்காருவார்; அந்நேரம் முழுதும் நாம் மூச்சுக் காட்டாமல் சும்மா இருப்போம். பிறகு திடீரென்று ஒரு கூச்சல் கிளப்புவோம்! சரிதானா?'' என்றான் கெக்.

''எந்தப் படுக்கைக்கு அடியிலும் நான் நுழையப் போவதில்லை, எந்த விதக் கூச்சலும் கிளப்பப் போவதில்லை. அடியில் போய் நுழைந்துகொண்டு நீங்களே கூச்சல் கிளப்புங்கள். அடே சுக், ஏன் உன் பைகளில் சர்க்கரைக் கட்டிகளைத் திணித்துக்கொள்ளுகிறாய்? பைகள் இப்போது குப்பைத் தொட்டிபோல நிரம்பி வழிகின்றனவே'' என்றாள் தாய்.

''குதிரைகளுக்குக் கொடுக்கப் போகிறேன், அம்மா'' என்று சுக் மிக அமைதியாய் விளக்கிவிட்டு, ''கெக், நீயும் ஒரு பன் ரொட்டி எடுத்துக்கொள். எதையும் நீயாகச் செய்வது என்பது உனக்கு ஒருபோதும் பழக்கமே இல்லை, எப்போதும் என்னையே கேட்கிறாய்'' என்றான்.

சடுதியில் வண்டிக்காரன் திரும்பி வந்தான். விசாலமான சறுக்கு வண்டியில் சாமான்கள் ஏற்றப்பட்டன. அடிப்பகுதியில் தீனிப்புல் பரப்பப்பட்டது. பையன்களை உள்ளே உட்கார வைத்து விரிப்புக் களையும் ஆட்டுத் தோல் கம்பளங்களையும் கொண்டு போர்த் தினார்கள்.

விடை கொடுங்கள் நகரங்களே, ஆலைகளே, ரயில் நிலையங் களே, கிராமங்களே, குப்பங்களே! முன்னே இருக்கின்றன காடுகள், மலைகள், மீண்டும் அடர்ந்து இருண்ட காடுகள், இவை மட்டுமே.

...தைகாக் காட்டின் அழகைத் திறந்த வாய் மூடாமல் ஆச்சரியத்தோடு பார்த்தபடி அந்திநேரம் வரையில் அவர்கள் குதூகலமாகவே சவாரி செய்தனர். ஆயினும் வண்டிக்காரனின் முதுகு பார்வையை மறைத்ததினால் சுக்குக்குச் சாலையை நன்றாகப் பார்க்க முடியவில்லை; எனவே, வரவர அவனுக்குச் சலிப்பு தட்டியது. ரொட்டியாவது அடையாவது கொடுக்கும்படி அம்மாவிடம் கேட்டான்.

அவளோ, அவனுக்கு எதுவுமே கொடுக்கவில்லை; ஆகவே அவனுக்கு எரிச்சல் மண்டியது. செய்வதற்கு வேறு ஒன்றும் இல்லாமையால் கெக்கை சறுக்கு வண்டி விளிம்புக்கு நெருக்கித் தள்ளத் தொடங்கினான்.

முதலில் கெக் வெறுமனே முண்டினான். பிறகு தாங்க முடி யாது போகவே, சுக்கின்மீது காறித் துப்பினான். சுக் சீற்றங் கொண்டு கெக்கின்மேல் பாய்ந்தான். ஆனால் கனத்த ஆட்டுத் தோல் போர்வைகளுக்கடியிலிருந்து கைகளை வெளியிலெடுக்க முடியவில்லை, எனவே குல்லாயணிந்த தலைகளால் ஒருவரை யொருவர் மோதிக்கொள்வதைத் தவிர அவர்களால் வேறு எதுவும் செய்ய முடியவில்லை.

தாய் அவர்களைப் பார்த்துச் சிரித்தாள். வண்டிக்காரன் குதிரை களைச் சாட்டையால் அடித்தான்; அவை பாய்ந்து ஓடின.

மயிரடர்ந்த இரண்டு வெள்ளை முயல்கள், சாலையில் தத்திக் குதித்து, நடனம் புரியத் தொடங்கின.

"ஹை ஹை!.. ஓடி விலகுங்கள், இல்லையோ துவையலாக்கி விடுவோம்!" என்று கத்தினான் வண்டிக்காரன்.



குறும்புக்கார முயல்கள் உடனே காட்டுக்குள் ஓடி மறைந்தன. குளிர்காற்று அவர்கள் முகத்தில் வீசியது. சறுக்கு வண்டி சரிவில் சரசரவென்று இறங்கியது; வேறு வழியின்றி சுக்கும் கெக்கும் ஒருவரை ஒருவர் இறுகக் கட்டிப்பிடித்துக் கொண்டனர். தைகாக் காட்டையும் நெருங்கி வரும் நீல மலைகளுக்கு மேலே மெதுவாக ஏறிய சந்திரனையும் நோக்கி வண்டி விரைவது போல இருந்தது.

இதோ, குதிரைகள் பனி படர்ந்த ஒரு சிறிய குடிசை அருகே தாமாகவே திடீரென்று நின்றுவிட்டன.

வண்டிக்காரன் வண்டியிலிருந்து தாவிக்குதித்து, ''இரவை இங்கே கழிப்போம்'' என்றான்.

குடிசை சிறியதுதான், ஆனால் வலுவானது. அதில் யாரும் வசிக்கவில்லை.

விரைவில் கெட்டிலில் நீரைக் கொதிக்க வைத்தனர். வண்டிக் காரன் உணவுக் கூடையை உள்ளே கொண்டுவந்தான்.

ஸாஸேஜ் பனியில் இறுகி விறைத்துப்போனதால் அதைக்

கொண்டு ஆணிகூட அடிக்கலாம் போலிருந்தது. அதை வெந்நீரில் ஊறவைத்துச் சூடேறிய அடுப்பின்மேல் ரொட்டித் துண்டுகளை வைத்தனர்.

அடுப்பின் பின்னால் கிளறிப் பார்த்த சுக், வளைந்த ஒரு சுருள் கம்பியைக் கண்டெடுத்தான். அது விலங்குகளைப் பிடிப்பதற்கான பொறியின் ஒரு பகுதி என்று அவனுக்கு வண்டிக்காரன் விளக்கினான். அக்கம்பி துருப்பிடித்திருந்தது; அது புழக்கத்தில் இல்லை என்பதை சுக் உடனே புரிந்து கொண்டான்.

மாலையுணவுக்குப் பிறகு, அவர்கள் படுக்கச் சென்றனர். சுவர் அருகே அகன்ற மரக் கட்டில் கிடந்தது. மெத்தைக்குப் பதில் அதன்மேல் இலைச் சருகுகள் பரப்பப்பட்டிருந்தன.

கெக் சுவருக்கு மிகவும் நெருக்கமான பக்கத்திலோ படுக்கையின் நடுவிலோ தூங்க விரும்பவில்லை. ஓரத்தில் தூங்கவே விரும்பினான். ''கண் வளர்வாய் கண்மணியே, கட்டிலோரம் படுக்காதே'' என்ற தாலாட்டைக் குழந்தைப் பருவம் முதலே கேட்டிருந்த போதிலும் அவன் எப்போதும் ஓரத்தில் தான் தூங்குவான்.



நடுவில் படுக்கப்போட்டால் போதும், கூட உறங்கும் சுக்கின் போர்வையை இழுத்து, முழங்கைகளை அவன் விலாவில் குத்தி, வயிற்றில் முழங்காலால் இடிப்பான்.

அவர்கள் ஆடை மாற்றாமலே படுத்து, ஆட்டுத் தோல் கம்பளி களைப் போர்த்துக்கொண்டனர். சுக் சுவரோடு ஒட்டியும், தாய் நடுவிலும் கெக் ஓரத்திலும் படுத்திருந்தார்கள்.

வண்டிக்காரன் மெழுகுவத்தியை அணைத்துவிட்டு, அடுப்புக்கு மேலேயிருந்த பரணில் ஏறிப் படுத்தான். எல்லாருக்கும் உடனே உறக்கம் வந்துவிட்டது. கெக்குக்கு மட்டும் இரவில் வழக்கம் போல் தாகம் எடுத்தது; விழித்துக்கொண்டான்.

அரைத் தூக்கத்துடன் கம்பளிக் காலணிகளை மாட்டிக்கொண்டு, மேசையருகே போய், கெட்டிலிலிருந்து கொஞ்சம் நீர் குடித்துவிட்டு, சன்னலுக்குப் பக்கமாய் ஓர் இருக்கையில் உட்கார்ந்தான்.

சந்திரன் மேகங்களின் பின்னே மறைந்திருந்தது; வெண்பனிக் குவியல்கள் சிறு சன்னல் கண்ணாடி வழியே கருநீலமாகத் தென்பட்டன.

"நம் அப்பாவைத் தான் எவ்வளவு எட்டாத் தொலையில் கொண்டு போட்டிருக்கிறார்கள்!" என்று வியந்தான் கெக். இந்த இடத்துக்கு அப்பால் உலகத்தில் கொஞ்சம் இடங்களே இருக்கமுடியும் என்று அவனுக்குப் பட்டது.

திடீரென்று அவன் உற்றுக் கேட்டான். சன்னலுக்கு வெளியில் ஏதோ ஒன்று தட்டுவது போன்ற ஒலி கேட்டது. அல்ல, அது தட்டொலி அன்று; யாரோ ஒருவனின் கனத்த அடிகளின்கீழ், வெண்பனி நறநறக்கும் சத்தம். அப்படித்தான் இருக்கும்! இருட்டிலே, ஏதோ ஒன்று பெருமூச்செறிந்தது, இயங்கிற்று, அடி எடுத்து வைத்தது. அது கரடிதான் என்று கெக் நம்பினான்.

"கொடிய கரடியே! உனக்கு என்ன வேண்டும்? எங்களுக்கு அப்பாவிடம் போக எவ்வளவு நீண்ட காலம் பிடிக்கிறது, நாங்கள் அவரை மீண்டும் ஒரு நாளும் காண முடியாதபடி எங்களை லபக் கென்று விழுங்கப் பார்க்கிறாயா?.. அதுமட்டும் நடக்காது, சொல்லி விட்டேன். குறிதப்பாத துப்பாக்கியாலோ, கூரிய குறுவாளாலோ யா ராவது கொன்று போடுவதற்குமுன் ஓடிப்போய்த் தப்பிப்பிழை!"



குறுகிய சன்னலின் பனியுறைந்த கண்ணாடி மீது முகத்தை இறுக்கமாய் அழுத்திக்கொண்டு, கெக் இந்த வார்த்தைகளை முணுமுணுத்தான். திகிலும் ஆவலும் ஒரே சமயத்தில் அவனைப் பற்றிக்கொண்டன.

ஓடும் மேகங்களுக்குப் பின்னிருந்து நிலா வெளிவந்தது. கருநீலப் பனிக் குவியல்கள் இப்போது மெல்லிய பால்வெண் ஒளி பெற்றன. உண்மையில் அது கரடியே அல்ல, அவர்களது குதிரை தான் கட்டவிழ்த்துக் கொண்டு, சறுக்கு வண்டியைச் சுற்றிலும் திரிந்துகொண்டும் அதில் இருந்த தீனிப்புல்லைக் கடித்துக்கொண்டும் இருந்தது.

கெக்குக்கு ஒரே ஏமாற்றம். அவன் படுக்கையில் ஏறி ஆட்டுத்தோல் போர்வைக்குள் நுழைந்து கொண்டான். அப்போது

அவனுக்கிருந்த நினைவுகள் மகிழ்ச்சியற்றவை; ஆகையால் அவன் கெட்ட கனவு கண்டான்.

மனிதனைத் தின்னும் மாமிச அரக்கன்
மருட்டிட அவனையும் முன்னே வந்தான்;
நெருப்பு எச்சிலை காரியே உமிழ்ந்து
இரும்புக் கரத்தால் அஞ்சிட வைத்தான்.

எங்கெனும் எரிதழல் ஏற்குமோ மாநிலம்
பாங்கினைக் கெடுத்திட பகைவர் எழுந்தனர்;
பாசிசக் கொடிதனைப் பாரினில் ஏற்றிட
படையது கண்டனர் படுகளம் புரிந்திட.

''நில்லுங்கள்!'' என்று அவர்களைப் பார்த்துக் கத்தினான் கெக். ''நீங்கள் தவறான வழியில் போகிறீர்கள்! இங்கே நீங்கள் வரக்கூடாது!''

ஆனால் யாரும் நிற்கவில்லை, கெக் சொன்னதைக் கேட்கவும் இல்லை.

கடுங்கோபம் கொண்ட கெக், சுக்கினுடைய செருப்புப் பெட்டியில் மற்றப் பொருள்களோடு இருந்த தகர ஊதுகுழலை விரைந்து எடுத்து, உரக்க ஊதினான்; கவச ரயில் அருகே சிந்தனையில் ஆழ்ந்து நின்று கொண்டிருந்த படைத்தலைவன் அதைக் கேட்டு நறுக்கென்று தலையை நிமிர்த்திக் கையை ஒரு வீச்சு வீசினான்; பயங்கரமான அவனது கனத்த பீரங்கிகள் எல்லாம் ஒரே நேரத்தில் குண்டுமாரி பொழிந்தன.

''ஆகா, அருமை! இன்னும் கொடுங்கள் சூடாக! ஒரு தரம் சுட்டால் அவர்களுக்குப் போதாது!'' என்று சொன்னான் கெக்.

* * *

தன் அருமைப் பிள்ளைகள் இருவரும் இரண்டு புறமும் இடிப்பதும் புரள்வதும் தாங்க முடியாமல் தாய் விழித்துக் கொண்டாள்.

அவள் சுக்கின் பக்கம் திரும்பினாள்; விறைப்பாகவும் கூர்மையாகவும் இருந்த ஏதோ ஒன்று அவள் விலாவில் குத்தியது. சுற்றிலும் தடவிப் பார்த்தாள்; சேமிப்பதில் குறியான சுக் படுக்கைக்கு இரகசியமாய்க் கொண்டுவந்த பொறியின் சுருள் கம்பி போர்வைக்கு அடியில் தட்டுப்பட்டது. அவள் அதைப் படுக்கைக்குப் பின்னால் வீசி எறிந்தாள். பிறகு நிலா ஒளியில் அவள் கெக்கின் முகத்தை ஒரு பார்வை பார்த்தாள்; அவன் கெட்ட கனவு கண்டு கொண்டிருந்தது அவளுக்குத் தெரிந்தது.

கனவு ஒன்றும் சுருள் கம்பி அல்லவே, எடுத்து அப்பால் எறிய! கனவைக் கலைக்க மட்டும் முடியும். எனவே மகனை அவள் ஒருக்கணித்துப் படுக்க வைத்து, மெதுவாய் ஆட்டி அசைத்து, அவனது கதகதத்த சின்னஞ்சிறு நெற்றிமேல் மெல்ல ஊதினாள்.

விரைவில் கெக் சப்புக் கொட்டினான்; அவன் முகத்தில்



புன்னகை தவழ்ந்தது. கெட்ட கனவு கலைந்து விட்டது என்பது அதன் பொருள்.

அதன்பின், தாய் படுக்கையைவிட்டு எழுந்து, காலுறைகளை மட்டுமே அணிந்துகொண்டு சன்னல் அருகே சென்றாள்.

இன்னும் பொழுது விடியவில்லை. வானத்தில் நிறைய நட்சத்திரங்கள் தெரிந்தன. அவற்றில் சில மிக உயரத்தில் பளிச் சிட்டன; மற்றவை தைகாக் காட்டுக்கு நேர் மேலே தாழ்வாக எட்டிப்பார்த்தன.

கெக் உட்கார்ந்திருந்த அதே இடத்தில் அமர்ந்து, அமைதியற்று இருக்கும் தனது கணவன் பணிபுரியும் இந்த இடத்திற்கு அப்பால், உலகில் ஏதேனும் இடம் இருக்கமுடியுமா என்று மகனைப் போல அவளும் அதிசயித்தாள்.

மறுநாள் முழுக்க அவர்கள் காடுகள் மலைகள் வழியாகவே சென்றனர். மலைமீது ஏறியபோது, வண்டிக்காரன் இறங்கி, சறுக்கு வண்டியின் பக்கமாக வெண்பனிமீது நடந்து சென்றான். ஆனால் செங்குத்தான சரிவுகளில் வண்டி மிகவும் துரிதமாக நழுவிச் சென்றது; அதனால், சுக், கெக் இருவருக்கும், சறுக்கு வண்டியும் குதிரைகளும் வானத்திலிருந்து கீழே பாய்வது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

கடைசியாக, மாலை நேரம் வந்தது; எல்லாரும் களைத்துவிட்டனர்; குதிரைகளும் சோர்ந்துவிட்டன. அப்போது வண்டிக்காரன் சொன் னான்:

"அப்பாடா வந்து சேர்ந்துவிட்டோம்! அதோ, அந்த இடத்திற்குப் பின்னால் ஒரு திருப்பம். அதைச் சுற்றிப் போனதும் ஒரு வெளி. அதில்தான் அவர்களின் இருப்பிடம்... ஹை ஹை, டுர்ர்யோ!"

சுக்கும் கெக்கும் மகிழ்ச்சியாகக் கத்திக்கொண்டே வண்டியில் துள்ளினர்; ஆனால் அந்நேரத்தில் சறுக்கு வண்டி குலுக்கிப் போடவே, அவர்கள் இருவரும் காய்ந்த புல்லுக்குள் தொப்பென்று விழுந்தனர்.

தாயின் முகத்தில் புன்னகை அரும்பியது. மென்மயிர்த் தொப்பியைச் சுற்றிக் கட்டியிருந்த கம்பளிச் சால்வையை அவிழ்த்துக்கொண்டாள்.

அதோ! கடைசித் திருப்பம். சறுக்கு வண்டி சுறுக்கென ஒரு திரும்பு திரும்பி மூன்று சிறு வீடுகளுக்கு அருகே போய் நின்றது; அவ்வீடுகள் காற்று ஊடுருவக் கூடாத ஒரு காட்டு வெளியில் இருந்தன.

என்ன விந்தை! ஒரு நாய்கூடக் குரைக்கவில்லை, ஒரு மனிதனைக் கூடக் காணவில்லை. புகைபோக்கிகளிலிருந்து புகை வரவில்லை. அவ்வீடுகளைச் சுற்றிலும் பாதைகள் எல்லாம் பனி மூடியிருந்தன; எங்கும் குளிர்காலத்தில் இடுகாட்டில் நிலவுவது போன்ற அமைதி குடி கொண்டிருந்தது. கருவெண் காக்கைகள் மட்டுமே செய்வதறியாமல் மரத்திற்கு மரம் தத்தித் தாவிக் கொண்டிருந்தன.

''எங்கே கொண்டுவந்து விட்டாய்? நாங்கள் வரவேண்டிய இடம் இதுதானா?'' என்று வண்டிக்காரனிடம் மிரட்சியுடன் வினவினாள் தாய்.

''நீங்கள் போக விரும்பிய இடத்திற்கே கொண்டு வந்திருக் கிறேன். அதோ தெரியும் மூன்று வீடுகளும் நிலவியல் ஆராய்ச்சி நிலையம், எண்-3. கம்பத்தில் ஓர் அடையாள அறிவிப்பு இருக்கிறதே... தெரிகிறதா? நீங்கள் வேண்டுவது நிலையம் எண்-4 ஆக இருக்குமோ? அப்படியானால், வேறு திசையில் இருநூறு கிலோமீட்டர் போயிருக்க வேண்டும்'' என்றான் வண்டிக்காரன்.

தாயார் அடையாளப் பலகையை உற்றுப் பார்த்துக்கொண்டே, ''இல்லை, இல்லை, இதுதான் நமக்குத் தேவையான இடம். ஆனால் எல்லாக் கதவுகளும் பூட்டப்பட்டிருக்கின்றன; முன்வாயிலில் வெண்பனி படிந்திருக்கிறது. எல்லாரும் எங்குதான் போய்விட்டார் கள்?'' என்று கேட்டாள்.

வண்டிக்காரனும் திகைப்புற்று, ''எங்கே போய்விட்டார்களோ தெரியாது. சென்ற வாரம், மாவு, வெங்காயம், உருளைக் கிழங்கு ஆகியவற்றை இங்கு கொண்டுவந்தோம். எல்லாரும் இங்குதான் இருந்தனர். தலைவரும் காவற்காரனும் நீங்கலாக எட்டு பேர்... நல்ல சங்கடந்தான் போங்கள்! எல்லாரையும் ஓநாய்கள் விழுங்கி விட்டனவோ?.. நீங்கள் இங்கேயே இருங்கள், இதோ காவற்காரன் இருப்பிடத்தில் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று சொன் னான்.



ஆட்டுத்தோல் கம்பளத்தை அப்பால் வீசிவிட்டு, வண்டிக்காரன் கடைசிக் குடிசையை நோக்கி வெண்பனியில் கால்கள் புதைய நடந்தான்.

விரைவில் அவன் திரும்பி வந்தான்.

''வீடு காலியாய் இருக்கிறது, ஆனால் அடுப்பு இன்னும் சூடாறவில்லை. காவற்காரன் அதிகத் தொலைவில் இருக்க முடியாது—ஒருகால் வேட்டைக்குப் போயிருக்கலாம். இரவில் அவன் திரும்பி வந்து, எல்லா விவரங்களையும் சொல்லுவான்.''

''அவன் என்ன சொல்ல? வெகு நாள்களாகவே இங்கே ஒருவருமில்லை என்பதுதான் எனக்கே தெரிகிறதே'' என்று உளைச்சலுடன் கூறினாள் தாய்.

''அவன் என்ன சொல்லுவான் என்பது எனக்குத் தெரியாது. இருந்தாலும், அவன் காவற்காரன் ஆயிற்றே, உங்களுக்கு ஏதேனும் சொல்லக் கூடும்'' என்றான் வண்டிக்காரன்.



காவற்காரன் குடிசையின் முன்வாயிலுக்குச் சிரமத்துடன் வண்டியை ஓட்டிச் சென்றான். அங்கிருந்து காட்டுக்கு ஒரு குறுகலான வழி சென்றது.

குடிசையில் புகுந்தனர். முன்னறையில் மண்வெட்டிகள், விளக்குமாறுகள், கோடரிகள், குச்சிகள் ஆகியவை இருந்தன; இரும்புக் கொக்கியில் தொங்கியது குளிரில் விறைத்துப்போன கரடித் தோல், முன்னறையைத் தாண்டி மற்றோர் அறைக் குள் நுழைந்தனர். வண்டிக்காரன் மூட்டைகளோடு பின்னால் வந் தான்.

குடிசை கதகதப்பாய் இருந்தது. வண்டிக்காரன் குதிரைகளுக்குத் தீனி வைக்கச் சென்றான். மிரண்டு போயிருந்த சிறுவர்களின் மேற்சட்டைகளைத் தாய் மௌனமாகக் கழற்றிவிட்டாள்.

''அப்பாவைக் காண வேண்டுமென்று தொலைதூரம் பயணம் செய்து வந்து சேர்ந்திருக்கிற அழகைப் பாரு!''



தாய் பலகையில் அமர்ந்து தீவிரமாகச் சிந்தித்தாள். என்ன நேர்ந்தது? வீடுகள் ஏன் காலியாயிருக்கின்றன? இப்போது என்ன தான் செய்வது? திரும்பிப் போவதா? அவளிடம் இருந்த பணம் வண்டிக்காரனுக்குக் கொடுக்க மட்டுந்தான் போதுமானது. காவற்காரன் வரும்வரை அவர்கள் காத்திருக்க வேண்டும். ஆனால், வண்டிக்காரனோ இன்னும் மூன்று மணி நேரத்தில் புறப் பட்டுவிடுவான். அதற்குள் காவற்காரன் வரவில்லை என்றால் என்ன செய்வது? மிகவும் பக்கத்தில் உள்ள புகைவண்டி நிலையமோ, தந்தி அலுவலகமோ கூட கிட்டத்தட்ட நூறு கிலோமீட்டர்களுக்கு அப்பால் தான் இருக்கின்றன.

வண்டிக்காரன் திரும்பி வந்தான்; அந்த அறையைக் கவன மாகப் பார்த்தான்; மோப்பம் பிடித்தான்; பிறகு அடுப்பின் அரு கில் போய், அடுப்புக் கதவைத் திறந்து பார்த்தான்.

‘‘பொழுது சாய்வதற்கு முன்னால் காவற்காரன் திரும்பிவிடு வான். பாருங்கள், இதோ பாத்திரத்தில் முட்டைக்கோசு சூப்பு இருக்

கிறது: நீண்ட தூரம் போவதாயிருந்தால், பாத்திரத்தை அவன் குளிரில் வைத்திருப்பான்'' என்று தேறுதல் கூறிவிட்டு, ''இருந் தாலும் உங்கள் இஷ்டம் போலச் செய்யுங்கள். இருக்கிற நிலை மையைப் பார்த்தால், நான் உங்களை இலவசமாகவே நிலையத் திற்குத் திரும்பிக் கொண்டுவிடுகிறேன். நான் கல்நெஞ்சன் அல்ல'' என்றான்.

''வேண்டாம், நிலையத்துக்கு நாங்கள் திரும்பிச் செல்வதில் பயனில்லை'' என்றாள் தாய்.

கெட்டிலில் நீரை மறுபடியும் கொதிக்க வைத்தார்கள்; ஸாஸேஜைச் சூடுபடுத்தித் தின்று, தேநீர் பருகினார்கள். தாயார் மூட்டைகளை அவிழ்த்துச் சாமான்களை எடுத்து வைக்கலானாள். சுக்கும் கெக்கும் அடுப்புக்கு மேலேயுள்ள கதகதப்பான பரண்மீது ஏறினார்கள். அங்கு பிர்ச் மரத்தின் கிளைகள், ஆட்டுத் தோல்கள், பைன் மரச் சிறாய்கள் ஆகியவற்றின் மணம் வீசியது. தாய் மனம் சோர்ந்து மௌனமாக இருந்ததால், சுக்கும் கெக்கும் கூட மௌனமாக இருந்தனர். ஆனால் வெகு நேரம் அமைதியாய் இருப்பது கடினமாயிற்றே; செய்வதற்கு ஏதுமன்றி சுக்கும் கெக்கும் அயர்ந்து தூங்கிவிட்டனர்.

வண்டிக்காரன் புறப்பட்டுச் சென்றதோ, தாய் பரண் மேலே ஏறி தங்களுக்குப் பக்கமாகப் படுத்துக் கொண்டதோ அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் விழித்த போது குடிசையில் ஒரே இருட்டு. முன்வாயிலில் யாரோ நடமாடும் ஓசை கேட்டது; அதனால் தான் மூவரும் ஒரே சமயத்தில் எழுந்துவிட்டனர். முன்னறையில் ஏதோ தடாரென்று விழுந்தது; ஒருகால் மண்வெட்டியாக இருக்கலாம். கதவு அகலத் திறந்தது, கைவிளக்கோடு காவற்காரன் உள்ளே வந்தான்; ஒரு பெரிய சடை நாய் அவனைத் தொடர்ந்து வந்தது.

துப்பாக்கியைத் தோளிலிருந்து கழற்றிவிட்டு, கொல்லப்பட்ட முயல் ஒன்றைப் பலகைமீது வீசினான்; அடுப்புக்கு மேலாகத் தன் கைவிளக்கைத் தூக்கிப் பிடித்து, ''நீங்கள் யார்?'' என்று கேட் டான்.

''நிலவியல் ஆராய்ச்சிக் குழுவின் தலைவர் செர்யோகின் மனைவி நான்; இவர்கள் அவர் குழந்தைகள். அத்தாட்சிப் பத்திரங்கள்

வேண்டுமானால் இதோ இருக்கின்றன'' என்று தாய் பரணிலிருந்து இறங்கிக்கொண்டே சொன்னாள்.

காவற்காரனோ, கலவரமடைந்த சுக், கெக் இருவரது முகங்கள் மீதும் வெளிச்சம் படும்படியாக விளக்கைத் தூக்கிப் பிடித்து, ''அத்தாட்சிகள் தாம் இதோ உட்கார்ந்திருக்கிறார்களே, பரண் மேலே! தகப்பனாரை அப்படியே உரித்து வைத்திருக்கிறது! அதிலும் இந்தக் கமூக்கு மொழூக்கு அப்பாவே அச்சு!'' என்றவாறே சுக்கை விரலால் சுட்டிக்காட்டினான்.

சுக்கும் கெக்கும் மனம் புண்பட்டனர், ஆனால் வெவ்வேறு காரணங்களால். தன்னைக் கமூக்கு மொழூக்கு என்றதனால் சுக்கின் மனம் புண்பட்டது; சுக்கைவிடத் தான்தான் அதிகமாக அப்பாவைப் போல் இருப்பதாக நினைத்திருந்ததனால் கெக்கின் மனமும் புண்பட்டது.

''நீங்கள் ஏன் இங்கே வந்திருக்கிறீர்கள்?'' என்று காவற்காரன் தாயைப் பார்த்துக் கேட்டான். ''உங்களை வரவேண்டாம் என்று சொல்லியிருந்தாரே?''

''நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை. வரவேண்டாம் என்று யார் சொல்லியிருந்தது?''

''செர்யோகினுடைய தந்தியை அஞ்சல் நிலையத்திற்கு நானே தான் கொண்டுபோனேன். அதில் வெகு தெளிவாய்ச் சொல்லி யிருந்தது: 'வருவதை இரண்டு வாரம் தள்ளிவைக்கவும். குழு விரைவில் காட்டுக்குள் செல்கிறது' என்று. 'வருவதைத் தள்ளி வைக்கவும்' என்று செர்யோகின் சொன்னால், வருவதைத் தள்ளி வைக்கவும் என்று தானே பொருள். நீங்கள் ஏன் கட்டளை களை மீறுகிறீர்கள்?''

''எந்தத் தந்தியைப் பற்றி நீ பேசுகிறாய்? எங்களுக்கு எந்தத் தந்தியும் வரவில்லையே'' என்றாள் தாய். அதை உறுதி செய்து கொள்ள விரும்புவள் போல சுக்கையும் கெக்கையும் திகைப்புடன் நிமிர்ந்து பார்த்தாள்.

அவர்களோ ஒருவரை ஒருவர் பீதியுடன் பார்த்துக் கொண்டு, சுவரின் பக்கம் விரைந்து நகர்ந்தனர்.

பையன்களை ஐயுறவோடு ஒரு பார்வை பார்த்து, ''குழந்தை



களே, நான் இல்லாதபோது தந்தி வரவில்லையா?'' என்றாள்.

பரண்மேலிருந்த சுள்ளிகளும் சிறாய்களும் நெறுநெறுத்தனவே தவிர மறுமொழி வரவில்லை.

''பதில் சொல்லுங்களடா, பாவிகளா! நான் வெளியே போயிருந்த போது நீங்கள் ஒரு தந்தியை வாங்கி, என்னிடம் கொடுக்க மறந்து விட்டீர்களா?'' என்றாள் தாய்.

சில நொடிகள் கழித்துப் பரண்மேலிருந்து திடுமென உரத்த அழுகை கேட்டது. சுக்கின் குரல் கீழ் தொனியில் ஒலித்தது; கெக்கின் குரலோ மேல் தொனியில் அலறியது.

''பொல்லாத பிள்ளைகள் நீங்கள்! எனக்கு எமனாகவே வருவீர்கள். உடனே அந்த இரைச்சலை நிறுத்தி, நடந்ததைச் சொல்லுங்கள்'' என்று கத்தினாள்.

'எமன்' என்று சொல்லைக் கேட்டதும், சுக்கும் கெக்கும் இன்னும் உரக்க அழத் தொடங்கினர். இப்படி வெகு நேரம் கழிந்தபிறகே, ஒருவருடன் ஒருவர் பூசலிட்டுக் கொண்டும் ஒருவர்

மீதொருவர் வெட்கமின்றிப் பழி சுமத்திக்கொண்டும் தங்கள் துயரக் கதையைச் சுற்றி வளைத்துச் சொல்லி முடித்தார்கள்.

* * *

நல்லது, இப்படிப்பட்ட பிள்ளைகளை என்னதான் செய்வது? பிரம்படி கொடுப்பதா? சிறையில் தள்ளுவதா? சங்கிலி பூட்டிக் கடுங்காவல் தண்டனை அளிப்பதா?

இல்லை, தாய் இவற்றில் எதையும் செய்யவில்லை. அவள் பெருமூச்சு மட்டும் விட்டுத் தன் பிள்ளைகளைப் பரணிலிருந்து கீழே இறங்கும்படி கட்டளையிட்டாள்; மூக்குகளைத் துடைத்து, முகங்கை கழுவித் துப்புரவு செய்து கொள்ளச் சொன்னாள்; பிறகு காவற்காரனைப் பார்த்து, ''நான் இப்போது என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டாள்.

ஓர் அவசரக் கட்டளையின் பேரில் நிலவியல் ஆராய்ச்சிக் குழு, அல்கராஷ் மலைப்பதிவுக்குப் போயிருக்கிறது; அக்குழு திரும்பி வர குறைந்தது பத்து நாள்களாவது பிடிக்கும் என்றான் காவற் காரன்.

''அப்படியானால், நாங்கள் பத்து நாள்கள் எப்படிக் காலந் தள்ளுவது? எங்களிடம் எவ்வித உணவும் இல்லையே!'' என்றாள் தாய்.

''நீங்கள் எப்படியாவது சமாளிக்கவேண்டியது தான். ரொட்டி தருகிறேன். இந்த முயலை நீங்கள் எடுத்துக்கொள்ளலாம்—தோல் உரித்துச் சமையுங்கள். நாளைக்கு நான் பொறிகளைக் கண்காணிப் பதற்காக இரண்டு நாள் காட்டிற்குப் போய் வரவேண்டும்'' என்று பதிலளித்தான் காவற்காரன்.

''மோசம். நாங்கள் இங்கு தனியே எப்படி இருப்பது? இந்த இடத்தைப் பற்றி எங்களுக்கு எதுவுமே தெரியாது; சுற்றிலும் காடும் விலங்குகளும் தவிர வேறு ஒன்றுமே இல்லையே'' என்றாள் தாய்.

''நான் உங்களுக்கு ஒரு துப்பாக்கியை வைத்துவிட்டுப் போகிறேன். கொட்டகையில் விறகு இருக்கிறது, அந்த மணற்குன்றுக்கு அப்பால்

ஒரு நீரூற்று இருக்கிறது. இதோ தானிய மூட்டை. இந்தக் குவளையில் உப்பு இருக்கிறது. உங்களுக்குப் பணிவிடை செய்ய எனக்கு நேரமில்லை, தெரிகிறதா?'' என்று சொன்னான் காவற் காரன்.

''ஒரே சிடுசிடுத்த ஆள் இந்தக் காவற்காரன். ஒரு விளாசு விளாசுவோமா இவரை?'' என்று கெக் சுக்கிடம் காதோடு காதாகக் கேட்டான்.

''கூடாது. நாம் ஏதேனும் சொன்னால், இவர் நம்மை வீட்டை விட்டே வெளியில் தள்ளிவிடுவார். பொறு, அப்பா வரட்டும், அப்பொழுது எல்லாவற்றையும் சொல்லிக்கொள்ளலாம்'' என்றான் சுக்.

''அப்பா வருவதாவது! அவர் வர அதிக நேரம்...''

கெக் அம்மாவிடம் போய், அவள் மடியில் ஏறிக் கொண்டான்; புருவங்களை நெரித்துக் கொண்டு, முரட்டுக் காவற்காரனைக் கோபத்தோடு ஒரு பார்வை பார்த்தான்.

காவற்காரன் தன் மென்மயிர் அங்கியைக் கழற்றிவிட்டு, கைவிளக்கு இருந்த மேசை அருகே வந்தான்.

அங்கியின் பின்புறத்தில் தோளிலிருந்து இடுப்பில் வார்பூட்டும் இடம் வரையில், ஒரு பெருந்துண்டு கிழித்தெடுக்கப்பட்டிருந்ததை கெக் அப்பொழுதுதான் கவனித்தான்.

''முட்டைக்கோசு சூப்பு அடுப்பில் இருக்கிறது. கரண்டிகளும், தட்டுகளும் அதோ இருக்கின்றன. உட்கார்ந்து சாப்பிடுங்கள். அதற் குள் நான் எனது அங்கியைச் சரிசெய்து கொள்கிறேன்'' என்று அவன் தாயிடம் சொன்னான்.

''வீட்டுக்காரன் நீ தான். உணவை நீயே எடுத்துப் பரிமாறு. அங்கியை என்னிடம் கொடு. உன்னை விட நான் மிக நன்றாக ஒட்டு வேலை செய்வேன்'' என்றாள் தாய்.

அவளை நிமிர்ந்து பார்த்த காவற்காரன் தன்னை கெக் கடுமையாக நோக்குவதைக் கண்டான்.

''ஓகோ! நீங்கள் பிடிவாதக்காரர்கள் என்று தெரிகிறது''என முணுமுணுத்தான். தாயிடம் அங்கியைக் கொடுத்து விட்டு பாத்திரங் களை எடுக்க அலமாரிக்குப் போனான்.



''இந்த மாதிரி எப்படிக் கிழிந்தது?'' என்று சுக் கேட்டான்.

''ஒரு கரடியோடு எனக்குச் சிறு சண்டை. அது என்னைப் பிறாண்டி விட்டது'' என்று காவற்காரன் விருப்பமின்றி பதி லளித்தான். பிறகு முட்டைக்கோசு சூப்பு இருந்த கனத்த பாத் திரத்தை மேசையின் மேல் வைத்தான்.

காவற்காரன் அறையை விட்டு வெளியில் போனதும், ''டேய் கெக், கேட்டாயா? அவன் கரடியோடு சண்டை போட்டிருக்கிறான்; அதனால்தான் இன்று அவ்வளவு கோபமாய் இருக்கிறான் என்று தெரிகிறது.''

எல்லாவற்றையும் கெக் கேட்டுக் கொண்டிருந்தான். ஆனாலும் தன் தாயார் மனம் புண்படும்படி செய்பவன் யாராயிருந்தாலும், கரடியோடு தனியாகச் சண்டை போடக் கூடியவனாயிருந்தாலுங்கூட, அவனுக்குப் பிடிக்காது.



* * *

அடுத்த நாள் காலை, பொழுது விடியுந்தறுவாயில், காவற்காரன் கோணிப்பை, துப்பாக்கி ஆகியவற்றை எடுத்துக்கொண்டு சறுக்குக் கட்டைகள் அணிந்து, நாயோடு காட்டினுள் புகுந்துவிட்டான். இப் போது, அவர்களே தங்களைப் பார்த்துக்கொள்ளும்படி ஆயிற்று.

மூன்று பேரும் தண்ணீர் எடுக்கப் போனார்கள். மணற்குன் றுக்கு மறுபுறம் ஒரு பாறையிலிருந்து சிறிய நீரூற்று வெண் பனிக்கு இடையே பெருகிக் கொண்டிருந்தது. கெட்டிலிலிருந்து கிளம்புவது போல நீரிலிருந்து ஆவி கிளம்பியது; ஆனால், சுக் ஊற்றுக்குள் ஒரு விரலை வைத்தபோது, நீர் பனிக்கட்டி போலக் குளிர்ந்திருப்பதைக் கண்டான்.

அடுத்து அவர்கள் கொஞ்சம் விறகுகளைக் கொண்டு வந்து சேர்த்தனர். அடுப்பை எவ்வாறு மூட்டுவது என்று தாய்க்கு நன்றாகத் தெரியவில்லை. எனவே விறகுகளில் நெருப்புப் பற்ற வெகு நேரமாயிற்று. கடைசியாக அவை எரியத் தொடங்கியதும் உக்கிரமான சூடு தாங்காமல் எதிர்ச்சுவரின் சன்னலில் கனமாகப் படிந்திருந்த பனிக்கட்டி சட்டென உருகியது.



இப்போது சன்னல் வழியே, காட்டின் ஓரத்திலிருந்த மரங்கள், அவற்றின் மேல் தத்தித் தாவிய கருவெண் காக்கைகள், நீல மலைத் தொடரின் சிகரங்கள் ஆகியவற்றைப் பார்க்கமுடிந்தது.

கோழிக் குஞ்சைச் சமையல் செய்யத் தாய்க்குத் தெரியும்; ஆனால் அவள் இதற்கு முன்பு ஒருபோதும் முயலைத் தோல் உரித்ததில்லை. எனவே, உணவு தயாரிக்க வெகு நேரம் பிடித்தது.

பகலுணவுக்குப் பின்னர் மூவரும் சிறிது உலாவிவரப் புறப் பட்டனர்.

துப்பாக்கியை அல்லது ஒரு சில தோட்டாக்களையாவது எடுத்துக்கொள்ளும்படி தாயிடம் சுக் மன்றாடினான். ஆனால் அவள் துப்பாக்கியை எடுத்துக் கொள்ளவில்லை. பதிலாக, அதிக உயரத்திலிருந்த கொக்கியில் அதை மாட்டினாள். பிறகு ஒரு முக்காலி மீது ஏறிநின்று, மிக உச்சத்தில் இருந்த அலமாரியின் மேல் தட்டில் தோட்டாக்களை வைத்தாள்; ஓர் ஒற்றைக் குண்டை எடுக்கத் துணிந்தாலும், ஒருநாள் கூட அவனுக்கு நிம்மதியாய்ப் போகாது என்று சுக்கை எச்சரித்தாள்.

சுக் முகஞ்சிவந்து போய், ஓட்டமாய் ஓடிவிட்டான். அவன் பையில் ஏற்கனவே ஒரு குண்டு இருந்தது.

விந்தையான உலாவுதல் அது! நீரூற்றுக்குப் போகும் குறுகிய வழியில் அவர்கள் ஒருவர்பின் ஒருவராகச் சென்றனர். குளிர்ந்த வானம் நீலம் படர்ந்திருந்தது; நீல மலைத்தொடரின் கூர்முனைக் கொடுமுடிகள், கனவில் வரும் அரண்மனைகளையும் கோபுரங் களையும் போலத் தெரிந்தன. எங்கும் ஒரே குளிர், ஒரே மௌ னம். காக்கைகள் கரைந்தது மட்டுமே அந்த மௌனத்தைக் கலைத் தது. சாம்பல்நிற அணில்கள் 'சிதார்' மரத்தின் தடித்த கிளை களின் இடையே தாவின. மரங்களின் கீழ், மிருதுவான வெண் பனியின் மீது அறிமுகமில்லாத விலங்குகள், பறவைகளின் விசித் திரமான அடிச்சுவடுகள் பதிந்திருந்தன.

காட்டில் ஏதோ முனகியது, சீழ்க்கையடித்தது, மடமடத்தது. உறைந்துபோன பெரிய பனித் துண்டு மரத்தின் உச்சியிலிருந்து சுள்ளிகளை முறித்துக்கொண்டு நொறுங்கி விழுந்ததால் உண்டான ஒலியாக இருக்க வேண்டும் அது.

முன்பு மாஸ்கோவில் இருந்தபோது, இந்த உலகம் முழுதும் மாஸ்கோவில்—அதன் தெருக்கள், வீடுகள், டிராம் வண்டிகள், பஸ்கள்—இவற்றிலேயே அடங்கி விட்டதாக கெக் கருதியிருந்தான்.

இப்பொழுதோ, உலகம் முழுதுமே ஒரு மாபெரும் இருண்ட காடாக அவனுக்குத் தெரிந்தது.

கெக்கின் சுபாவமே அப்படி: தன்மீது சூரிய ஒளி பட்டால்,

பூமியைச் சுற்றியுள்ள ஆகாயம் முழுதும் மேகங்களோ மழையோ இல்லாமல் தெளிந்து இருக்கின்றது என்று திண்ணமாக நம்புவான். தான் மகிழ்ச்சியாய் இருந்தால் உலகத்தில் எல்லாரும் மகிழ்ச்சி யாகவே இருப்பதாக நினைத்துக்கொள்வான்.

...இரண்டு நாள்கள் கடந்தன; மூன்றாம் நாள் வந்தது; காட்டுக்குப் போன காவற்காரன் இன்னும் திரும்பவில்லை. பனி மூடிய அந்தச் சிறு குடிசையில் ஒரு பீதி உணர்ச்சி நிலவிற்று.

மாலைநேரங்களிலும் இரவிலும் அந்த இடம் மிக மிகப் பயங்கரமாய் இருந்தது. மாலையானதும் அவர்கள் எந்த நாளும் வெளிக்கதவைப் பூட்டித் தாழ்ப்பாள் போட்டுக் கொள்ளத் தவற வில்லை. சன்னல்களைப் பாய்களால் மறைத்தார்கள். அதனால் வெளிச்சம் விலங்குகளை வீட்டின் பக்கம் இழுக்காமல் இருக்கும் என்று நினைத்தனர்; உண்மையில், அவர்கள் அதற்கு நேர்மா றாகச் செய்திருக்க வேண்டும்; காரணம், விலங்கு மனிதன் அன்று; அது வெளிச்சத்திற்கு அஞ்சும். புகைபோக்கியில் காற்று ஓலமிட் டது. பனிப்புயல் சுவர்களின் மீதும், சன்னல்களின் மீதும் சிறுசிறு கூரிய பனிச் சிதல்களை வீசியடித்த போது, உள்ளே இருந்தவர் களுக்கு, யாரோ அங்கு சுரண்டுவது போலவும் பிறாண்டுவது போல வும் தெரிந்தது.

அவர்கள் அடுப்புக்கு மேல் இருந்த பரண்மீது ஏறிப் படுத்துக் கொண்டனர்; தாய் அவர்களுக்குப் பல விதக் கதைகளும் கட்டுக் கதைகளும் சொன்னாள். கடைசியில் அவளும் கண் அயர்ந்தாள்.

''டேய், சுக், கட்டுக்கதைகளில் மட்டும் மந்திரவாதிகள் வருகிறார் களே, அது என்? உண்மையாகவே மந்திரவாதிகள் இருந்தால், எவ்வளவு வேடிக்கையாய் இருக்கும்?'' என்றான் கெக்.

''பேய்களும் பிசாசுகளும் கூடவா?''

கெக் உளைச்சலோடு தலையை அசைத்தான். ''இல்லை, பேய்களைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள்? அவற்றால் பயன் என்ன? ஆனால் நாம் ஒரு மந்திரவாதியை அழைக்கக் கூடுமானால், அவனைத் தந்தையிடம் பறந்து போகச் சொல்லி, நாம் பல நாள்களுக்கு முன்பே இங்கு வந்துவிட்டதைத் தெரிவிக்கும்படி அனுப்ப முடியும்'' என்றான்.

‘‘ஆனால் அவன் எதன்மீது பறப்பான்?’’

‘‘எதன்மீது பறப்பதா?.. ஏன், அவன் தன் கைகளையே வீசியாட்டிப் பறப்பான். அல்லது வேறெந்த முறையிலாவது பறப்பான். அவனுக்கு வழி தெரியும், நீ கவலைப்படாதே.’’

‘‘இப்போது அவனுக்குக் கைகளை வீசியாட்டக் கடுங்குளிராக இருக்கும். என்னைப் பார்: நான் கையுறைகளை அணிந்திருக்கிறேன்; இருந்தும்கூட விறகுகளை உள்ளே கொண்டுவரும்போது என் விரல்கள் குளிரில் மரத்துப் போய்விடுகின்றன’’ என்றான் சுக்.

‘‘அது சரி, நீயே சொல்லு, சுக்: அது வேடிக்கையாய் இருக்குமா இல்லையா?’’

‘‘எனக்குத் தெரியாது. நம் வீட்டு முகப்பில் நிலவறை உண்டே, இப்போது மீஷ்க்கா க்ரியூக்கவ் குடியிருக்கிறானே, அதில் முன்பு ஒரு நொண்டி வசித்துவந்தது நினைவிருக்கிறதா? அவன் முறுக்கு விற்றுவந்தான். எல்லாக் கிழவிகளும் பெண்களும் தங்கள் அதிர்ஷ்டங்களைத் தெரிந்து கொள்ள அவனிடம் வருவார் கள்—அதாவது யாருக்கு அதிர்ஷ்டம் வரும், யாருக்கு வாராது என்றெல்லாம் அவன் குறி சொல்வான், தெரியுமா?’’



‘‘அவன் சொன்னது உண்மையாயிற்றா?’’

‘‘எனக்குத் தெரியாது. மிலீஷியாக்காரர்கள் வந்து, அவனை அழைத்துப் போனார்கள், அவன் இருந்த இடத்தில் ஏராளமான திருட்டுப் பொருள்கள் கண்டு பிடிக்கப்பட்டன; எனக்கு அதுதான் தெரியும்.’’

‘‘அப்படியானால் அவன் மந்திரவாதி அல்ல, போக்கிரி என்பதைத் தான் அது காட்டுகிறது. நீ என்ன நினைக்கிறாய்?’’

‘‘அவன் நிச்சயமாகப் போக்கிரிதான்’’ என்று சுக் ஒத்துக் கொண்டான். ‘‘ஆனால் நான் சொல்வது எல்லா மந்திரவாதிகளுமே போக்கிரிகள் என்பதுதான். மந்திரவாதிக்குப் பாடுபட்டு உழைக்க வேண்டிய தேவை என்ன? அவன் தான் எல்லா இடுக்குகளிலும் நுழைய முடியுமே! வேண்டியவற்றை எடுத்துக்கொள்ளலாமே... அது கிடக்கட்டும். இப்போது நீ தூங்குவது நல்லது, கெக்; நான் உன்னோடு மேற்கொண்டு பேசப்போவதில்லை’’ என்றான்.

‘‘ஏன் இல்லை?’’

‘‘ஏனெனில் நீ வெற்றுப் பேச்சாய்ப் பேசுகிறாய்; பிறகு உனக்குக் கெட்ட கனவு வரும்; முழங்கால் முழங்கைகளால் என்னை இடித்துத் தள்ளுவாய். நேற்று இரவு, நீ என் வயிற்றில் குத்தியது எனக்கு இன்பமாய் இருந்தது என்று நினைக்கிறாயா? எங்கே, நானும் உன்னைக் குத்திப் பார்க்கிறேன்.’’

...நான்காம் நாள் காலையில், விறகை தாய் வெட்டும்படி ஆயிற்று. அவர்கள் அந்த முயலைச் சாப்பிட்டுவிட்டு வெகு காலம் கழிந்தது. காக்கைகள் அதன் எலும்புகளைக் கொத்தித் தீர்த்து விட்டன. பகலுணவுக்கு அவர்களிடம் இருந்தவை எல்லாம், சிறிது எண்ணெயும் வெங்காயமும் கலந்த கஞ்சிதான். ரொட்டிக் கையிருப்பு கரைந்து கொண்டே வந்தது; ஆனால் தாய் கொஞ்சம் மாவு கண்டுபிடித்து, அவர்களுக்கு தோசை வார்த்துக் கொடுத்தாள்.

இந்த மாதிரி பகலுணவுக்குப்பின், கெக் மிகவும் தளர்ந்துவிட்டான்; அவனுக்குக் காய்ச்சல் இருக்கிறதோ என்று தாய் அச்சப்பட்டாள்.

அவனை உள்ளேயே இருக்குமாறு கட்டளையிட்டாள். பிறகு சுக்குக்கு ஆடையுடுத்தி, இரு வாளிகளையும் சிறு சறுக்கு

வண்டிய்யையும் எடுத்துக்கொண்டு இருவரும் தண்ணீர் எடுக்கவும் காலையில் விசையடுப்பைப் பற்றவைக்கச் சுள்ளிகள் சேகரிக்கவும் வெளியே சென்றனர்.

கெக் தனியாயிருந்தான். அவன் நீண்ட நேரம் காத்திருந்தான், பிறகு அவனால் சும்மாவிருக்க முடியவில்லை, ஆகவே...

சுக்கும் தாயும் திரும்பிவர நேரமானது. அவர்கள் வரும் வழியில் சறுக்கு வண்டி தண்ணீர் நிறைந்த வாளிகளோடு குடை சாய்ந்துவிட்டது; எனவே அவர்கள் நீரூற்றுக்கு மறுபடியும் போக வேண்டியதாயிற்று. பிறகு, வீட்டிற்குப் பாதி வழியில் சுக் தனது கையுறையைக் காட்டோரத்தில் வைத்து மறந்துவிட்டான் என்று தெரியவந்தது. அவர்கள் மீண்டும் திரும்பிச் சென்றனர். அதற்குள் அந்தி நேரம் வந்துவிட்டது.

கடைசியாக அவர்கள் வீடு சேர்ந்தபோது, கெக்கை எங்குமே காணவில்லை. அவன் அடுப்புப் பரண்மேல், ஆட்டுத்தோல்களின்



அடியில் ஒளிந்து கொண்டிருப்பான் என்று அவர்கள் முதலில் நினைத்தனர். ஆனால் அவனை அங்கு காணோம்.

சுக் ஒரு புன்னகை செய்து, கெக் அடுப்பின் கீழ்த்தான் இருக்கவேண்டும் என்று தாய்க்குக் காதோடு காதாகச் சொன்னான்.

அதைக் கேட்டுத் தாய் கோபம் அடைந்தாள்; உடனே வெளியில் வரும்படி கெக்குக்குக் கட்டளையிட்டாள். பதில் வரவில்லை. பிறகு சுக் நீண்ட இடுக்கியை எடுத்து, அடுப்பின் கீழ் அதனால் துழாவிப் பார்த்தான். இல்லை, கெக் அங்கும் இல்லை.

தாய் பெரிதும் துயருற்றாள். கதவின் அருகில் இருந்த ஆணியை நோக்கினாள். கெக்கின் மேற்சட்டையையும் தொப்பியையும் காண வில்லை.

வெளியே போய் வீட்டைச் சுற்றிலும் பார்த்தாள்; பிறகு திரும்பி வந்து கைவிளக்கை ஏற்றி, இருண்ட பெரிய சாமான் அறைக்குள்ளும் விறகுக் கொட்டிலுக்குள்ளும் போய் எட்டிப் பார்த்தாள்... கெக்கை அவள் கூவி அழைத்தாள், திட்டினாள், நயமாகவும் சொல்லிப் பார்த்தாள், ஆனால் ஒரு பதிலும் கிடைக்கவில்லை. பனிக் குவியல்களை இருள் விரைவில் கவிந்துகொண்டே வந்தது.

தாய் மறுபடியும் வீட்டிற்குள் விரைந்து சென்று பார்த்தாள். துப்பாக்கியை ஆணியிலிருந்து வெடுக்கெனப் பறித்தாள்; குண்டு களையும் கைவிளக்கையும் கையில் எடுத்துக்கொண்டாள்; பிறகு வீட்டை விட்டுப் போகக் கூடவே கூடாது என்று சுக்கை எச்சரித்து விட்டு வெளியே ஓடினாள்.

சென்ற நான்கு நாள்களில் வெண்பனியில் ஏராளமான அடிச்சுவடுகள் பதிந்திருந்தன.

கெக்கை எங்கே தேடுவது என்று அவளுக்குத் தெரியவேயில்லை; ஆனாலும், கெக் தனியாகக் காட்டுக்குள் போகத் துணிந்ததை அவளால் நம்பமுடியவில்லை. எனவே சாலை வழியாகப் போகத் தீர்மானித்தாள்.

சாலையில் ஒருவரும் தென்படவில்லை.

அவள் துப்பாக்கியைக் கெட்டித்து, அதனைச் சுட்டாள். பிறகு உன்னிப்பாகக் காதுகொடுத்துக் கேட்டாள். மற்றொரு முறையும், பிறகு இன்னொரு முறையும் சுட்டாள்.



திடுமென்று எங்கோ மிகவும் அண்மையில் ஒரு பதில் வெடிச் சத்தம் கேட்டது. அவளுக்கு உதவுவதற்காக யாரோ ஒருவன் விரைந்து வந்து கொண்டிருந்தான் என்பது தெளிவு. அவள் ஓட விரும்பினாள்; ஆனால், அவளது கம்பளிக் காலணிகள் வெண் பனியில் புதைந்து விட்டன. விளக்கும் கையிலிருந்து விழுந்து விட்டது; கண்ணாடி உடைந்து வெளிச்சம் அவிந்தது.

அப்போது காவற்காரன் குடிசையின் முன்வாயிலிலிருந்து, காதைத் துளைக்கும் கூச்சல் கேட்டது. அது சுக்கின் கூச்சல். துப்பாக்கி ஒலிகளைக் கேட்டதும், கெக்கை விழுங்கிவிட்ட ஓநாய்கள் இப்போது தாயைத் தாக்குகின்றன என்று எண்ணிக்கொண்டு கூச்சலிட்டான்.

தாய் விளக்கை அப்பால் எறிந்தாள்; மூச்சுத் தடுமாற வீட்டை நோக்கி ஓடினாள். அங்கி இல்லாத சுக்கை உள்ளே தள்ளி, துப்பாக்கியை ஒரு மூலையில் வீசி எறிந்தாள். பனிக்கட்டி போல் குளிர்ந்த தண்ணீரை அகப்பையால் முகந்து பறக்கப் பறக்கச் சில மடக்குகள் குடித்தாள்.

கதவருகில் தடதட வென்ற காலடிச் சத்தமும் மடாரென்ற ஓசையும் கேட்டன. பிறகு கதவு தடாலென்று திறந்தது. வீட்டுக்குள்ளே நாய் பாய்ந்து தாவியது; அதனைத் தொடர்ந்து நீராவிப் படலம் சூழ்ந்த காவற்காரன் வந்தான்.

அவர்களுக்கு வணக்கம் சொல்லாமலும் மேலங்கியைக் கழற்றாமலும், ''என்ன சேதி? துப்பாக்கிச் சூடு எல்லாம் எதற்காக?'' என்று காவற்காரன் கேட்டான்.

''என் பிள்ளையைக் காணோம்'' என்றாள் தாய். அவள் முகத்தில் கண்ணீர் ஆறாய்ப் பெருகிற்று. அதற்கு மேல் அவளால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

''ஒரு நொடி பொறுங்கள், அழுகையை நிறுத்துங்கள்'' என்று சுருக்கெனச் சொன்னான் காவற்காரன். ''அவனை எப்போது முதல் காணவில்லை? நீண்ட நேரத்திற்கு முன்பா சமீபத்திலா?''

என்று கேட்டுவிட்டு, பிறகு நாயைப் பார்த்து, ''இந்தா, வீரா, திரும்பிச் செல்'' என்று கட்டளையிட்டான். ''வாயைத் திறந்து சொல்லுங்கள், இல்லாவிட்டால் மறுபடியும் நான் வெளியில் போய் விடுவேன்!'' என்றான்.

''ஒரு மணிக்கு முன்னால். நாங்கள் தண்ணீர் கொண்டுவரச் சென்றோம்; திரும்பி வந்தபோது, அவனைக் காணவில்லை. அவன் மேலங்கி அணிந்து எங்கேயோ போயிருக்க வேண்டும்'' என்று விடையளித்தாள் தாய்.

''ஒரு மணி நேரத்திற்குள் அவன் மிகவும் தொலைவில் போயிருக்க முடியாது; மேலும் அவன் கம்பளிக் காலணிகளையும் மேலங்கியும் அணிந்திருந்தால், பனியில் விறைத்துப் போக மாட்டான்'' என்று சொல்லிவிட்டு, நாயைப் பார்த்து, ''வீரா, வா இங்கே. இதைச் சிறிது மோப்பம் பிடி'' என்றான்.

காவற்காரன் ஆணியிலிருந்து கெக்கின் குல்லாயை இழுத்து எடுத்தான். குல்லாயையும் கெக்கின் ரப்பர் மேல் காலணியையும் நாயின் மூக்கின் கீழ் போட்டான்.

நாய் அவற்றைக் கவனமாக மோப்பம் பிடித்து விட்டு, அறிவுக் கூர்மையான கண்களால் எசமான் முகத்தை நோக்கியது.

காவற்காரன் கதவைத் திறந்தபடி, ‘‘வா இப்படி, தேடு, வீரா, அவனைக் கண்டுபிடி!’’ என்று நாய்க்குக் கட்டளையிட்டான்.

ஆனாலும் நாய் வாலைக் குழைத்து, நின்ற இடத்திலேயே நின்றது.

‘‘போ. அவனைக் கண்டுபிடி, வீரா, கண்டுபிடி!’’ என்றான் காவற்காரன் கடுமையாக.

நாய் காற்றை முகர்ந்து முகர்ந்து பார்த்தது; கால்களை மாற்றி மாற்றி வைத்தது; ஆனால் இடத்தை விட்டு நகரவில்லை.

‘‘இந்த ஆட்டம் எல்லாம் எதற்காக?’’ என்று அதட்டினான் காவற்காரன். மேலும் ஒரு முறை குல்லாயையும் ரப்பர் மேல் காலணியையும் நாயின் மூக்கின் கீழ் வைத்தான்; பிறகு வெளியில் போவதற்காக அதன் வாரைப் பற்றினான்.

ஆனால் நாய் காவற்காரனைத் தொடரவில்லை. அது அங்கேயே சுற்றிச் சுற்றி வந்தது; கடைசியாக நேர் எதிர்த்திசையில் சென்றது.

ஒரு பெரும் மரப் பெட்டிக்கு அருகே நின்று மயிர் அடர்ந்த பாதத்தினால் அதன் மூடியைப் பிறாண்டியது. பிறகு, எசமான் பக்கம் திரும்பி, மூன்று முறை சோம்பலோடு உரக்கக் குரைத்தது.

தாய் திகைத்துப் போய் நின்றாள். காவற்காரன் தன் துப்பாக்கியை அவளிடம் கொடுத்துவிட்டு, பெட்டியருகே போய் அதன் மூடியைப் படக்கென்று திறந்தான்.

அங்கே, ஆட்டுத் தோல்கள், கோணிப்பைகள் ஆகியவற்றின்மீது கெக் ஆழ்ந்த உறக்கத்தில் கிடந்தான். அவன் உடம்பு மேலங்கியால் மூடிப் போர்த்தியிருந்தது; தலை தொப்பியின்மீது இருந்தது.

அவனை எழுப்பியபோது, தூக்கக்கலக்கத்துடன் அவனது கண்கள் திருதிரு என்று விழித்தன. சுற்றிலும் இத்தகைய ஆரவாரமும் குதூகலமும் எதற்காக என்பது அவனுக்குப் புரியவேயில்லை. தாய் அவனை மறுபடி மறுபடி முத்தமிடுவதும் அழுவதுமாக இருந்தாள். சுக் கைகளையும் கால்களையும் மாறிமாறிப் பற்றி இழுத்துக் கொண்டு துள்ளிக் குதித்தான்.

‘‘ஆகா, ஆகா, ஆகா..!’’ என்று ஆர்ப்பரித்தான்.

சடை நாயின் மூக்கில், சுக் முத்தம் வைத்தான்; ஆனால் அது திகைப்போடு மறுபுறம் திரும்பிக் கொண்டது. ஏன் இந்தக்

கொண்டாட்டம் என்பது அதற்குப் புரியவில்லை. வாலை மெல்லக் குழைத்து, அது மேசையின் மேல் இருந்த ரொட்டித் துண்டை ஆவலோடு பார்த்தது.

தாயும் சுக்கும் நீர் எடுக்கச் சென்றிருந்த போது, கெக் சலித்துப் போய் ஒரு வேடிக்கை செய்யத் தீர்மானித்து, தன் தொப்பியையும் மேலங்கியையும் ஆணியிலிருந்து எடுத்துக் கொண்டு பெட்டிக்குள் நுழைந்தானாம். அவர்கள் திரும்பி வந்து, அவனைத் தேடத் தொடங்கும்போது, பெட்டிக்குள்ளிருந்து சட்டென்று பயங்கரமான குரலில் வீறிடுவது என்பது அவனது திட்டம். ஆனால் அவர்கள் வர நீண்ட நேரம் பிடித்ததால், அவன் அங்கேயே தான் அறியாமலே தூங்கிவிட்டானாம். இதெல்லாம் இப்போதுதான் தெரியவந்தது.

காவற்காரன் திடுமென எழுந்திருந்து ஒரு கனத்த திறவுகோல், நீலநிற கசங்கிய கடித உறை இரண்டையும் மேசையின் மீது வைத்தான்.

''இதோ, எங்கள் தலைவர் செர்யோகினின் அறைக்கும் சாமான் அறைக்கும் திறவுகோல், அவர் கொடுத்தனுப்பிய கடிதம். அவர் தமது ஆட்களோடு நான்கு நாள்களில், அதாவது புத்தாண்டு விழாவுக்கு முன், இங்கு வந்துவிடுவார்'' என்றான்.

துடுக்கான, கடுத்த பார்வையுடைய இந்தக் கிழவன் போயிருந்தது அங்கேதான்! அவன் விலங்குப் பொறிகளைக் கண்காணிக்கப் போவதாகச் சொன்னான். ஆனால் அதற்குப்பதில், சறுக்குக் கட்டைகளை மாட்டிக் கொண்டு, தொலைவில் உள்ள அல்கராஷ் மலைப்பதிவுக்குப் போயிருக்கிறான் என்று தெரிந்தது.

உறையைத் திறக்காமலே வைத்துவிட்டு தாய் எழுந்தாள்; நன்றி உணர்ச்சியோடு முதியவனின் தோளில் கையை வைத்தாள்.

அவனோ இதைப் பொருட்படுத்தாதவனைப் போல, தோட்டாத் தக்கைகள் வைத்திருந்த டப்பாவைப் பெட்டியில் கவிழ்த்து விட்டதற்காக கெக்கையும் விளக்குக் கண்ணாடியை உடைத்ததற் காகத் தாயையும் கடிந்து முணுமுணுக்கத் தொடங்கினான். அவன் நெடுநேரம் விடாமல் தொனதொனத்தான், ஆயினும் பரி வுள்ள அந்த விசித்திர மனிதனிடம் இப்போது யாருக்கும் அச்ச முண்டாகவில்லை.

அன்று சாயங்காலம் முழுதும் தாய் கெக்கை விட்டு அகல வேயில்லை. மிகச் சிறு ஓசை ஏற்பட்டாலும் மகன் திடீரென மறைந்துவிடுவானோ என்று பயந்தவள் போல, அவன் கையை வெடுக்கெனப் பிடித்துக்கொள்வாள். கெக்கிடம் அவள் காட்டிய அளவு கடந்த பரிவைக் கண்டு கடைசியில் சுக்குக்கு மனத்தாங்கல் உண்டாயிற்று. நாமும் பெட்டிக்குள் ஒளிந்துகொள்ளாமல் போனோமே என்று வருந்தினான்.

* * *

இப்போது ஒரே மகிழ்ச்சி நிலவியது. அடுத்த நாள் காலையில் காவற்காரன் தந்தையுடைய அறையின் கதவைத் திறந்து அடுப்பைப் பற்றவைத்து மூண்டெரியச் செய்தான். அவர்களுடைய சாமான் களையும் அங்கே கொண்டுவந்து வைத்தான். அறை பெரியது, வெளிச்சம் நிரம்பியிருந்தது; ஆனால் அதில் உள்ள எல்லாச் சாமான்களும் தாறுமாறாய்க் கிடந்தன.

உடனே தாய் வீட்டைத் துப்புரவுசெய்யத் தொடங்கினாள். நாள் முழுதும் அவள் பொருள்களை இடம் மாற்றி மாற்றி வைத்தாள், சுரண்டித் தேய்த்தாள், கழுவினாள், தூசு அகற்றினாள்.

மாலையில் ஒரு கட்டு விறகுடன் காவற்காரன் வந்த போது, ஒருபோதுங் காணாத ஒழுங்கையும் துப்புரவையும் பார்த்து அப்படியே மலைத்துப்போய், அறைக்குள்ளே புகாமல் வாயிலிலேயே நின்று விட்டான்.

ஆயினும், நாய் நேரே உள்ளே வந்தது.

அப்பொழுதுதான் கழுவித் துடைக்கப்பட்ட தரையில் நடந்து, அது கெக்கின் பக்கம் சென்று தன் குளிர்ந்த மூக்கினால் அவனை மெல்ல மெல்ல இடித்து, ''ஏ, முட்டாள் பயலே, உன்னைக் கண்டுபிடித்தது நான்; அதற்காக நீ எனக்கு ஏதாவது தின்னக் கொடுத்தாக வேண்டும்'' என்று சொல்லுவது போலத் தோன்றியது.

தாய் அதற்கு ஒரு ஸாஸேஜ் துண்டு வீசினாள். அதைக் கண்ட காவற்காரன், தைகாக் காட்டிலே நாய்களுக்கு ஸாஸேஜ் ஊட்டி வளர்த்தால் வெறுங்கேலிக் கூத்தாகும் என்று முணுமுணுத்தான்.



எனவே, தாய் ஸாஸேஜில் ஒரு பாதியை அறுத்து அவனுக்கும் கொடுத்தாள். ''நன்றி'' என்று சொல்லிவிட்டு, நகரவாசிகளின் விந்தையான போக்குகளை எண்ணி, நரைத்தலையை அசைத்த வாறே ஏதோ முணுமுணுத்துக்கொண்டு போனான்.

அடுத்த நாள் அவர்கள் புத்தாண்டு மரம் அலங்கரிக்கத் தீர்மானித்தனர்.

அலங்காரங்களைச் செய்வதில் அவர்கள் எதைத் தான் பயன்படுத்தாமல் விட்டனர்! பழைய சஞ்சிகைகளில் உள்ள வர்ணப் படங்கள் எல்லாவற்றையும் கத்தரித்து எடுத்தார்கள். கந்தைகளை யும் பஞ்சுகளையும் கொண்டு மனிதப் பொம்மைகளையும் விலங்குகளையும் செய்தனர். தந்தையினுடைய மேசை இழுவைப் பெட்டியிலிருந்து எல்லா மெல்லிய புகையிலைத் தாளையும் எடுத்து அழகிய மலர்கள் செய்தனர்.

கலகலப்பின்றிச் சிடுசிடுவென்றிருந்த காவற்காரன் கூட, விறகு



கொண்டுவரும் பொழுதெல்லாம் அவர்களது சாமர்த்தியத்தைப் பார்த்து அதிசயித்தவாறு நீண்டநேரம் கதவின் பக்கம் நிற்பான். முடிவில் அவனாலும் உற்சாகத்தை அடக்கமுடியவில்லை. தேயிலைப் பொட்டலங்களிலிருந்து எடுத்த மெல்லிய ஈயத்தாள்களையும் செருப்புத் தைப்பதற்காக அவன் உபயோகித்து வந்த பெரிய மெழுகுத் துண்டையும் கொண்டுவந்து அவர்களுக்குக் கொடுத்தான்.

என்ன வேடிக்கை! அலங்காரத் தொழிற்சாலை உடனடியாக மெழுகுத்திரி ஆலையாக மாறியமைந்தது. மெழுகுத்திரிகள் அழகோ ஒருங்கோ இன்றிக் கோணல் மாணலாயிருந்தன; ஆனாலும் அவை நகரத்துக் கடைகளில் கிடைக்கக்கூடிய மிகமிகச் சிறந்த மெழுகுத்திரிகளைப் போலவே பளிச்சென்று எரிந்தன.

இப்போது மரம் ஒன்றுதான் குறை. தாய் காவற்காரனிடம் கோடரி கேட்டாள். அவன் ஒன்றும் பதில் சொல்லாமல், தன் சறுக்குக்கட்டைகளை மாட்டிக் கொண்டு காட்டுக்குப் புறப்பட்டான்.

அரைமணி நேரத்தில் அவன் திரும்பி வந்தான்.

அலங்காரங்கள் அவ்வளவு கவர்ச்சியாயில்லை, கந்தைகளால் செய்யப்பட்ட முயல்கள் தோற்றத்தில் பூனைகளைப் போலிருந்தன, பொம்மைகள் நேர் மூக்கும் உண்டைக் கண்ணுமாக ஒரே மாதிரியிருந்தன, மெல்லிய ஈயத்தாள் சுற்றிய பிர் கூம்புகனிகள் கண்ணாடியால் செய்த வர்ணக் கூம்புகனிகளைப் போல மின்ன வில்லை என்பதெல்லாம் உண்மை; ஆனால் இந்தக் குறைகள் அனைத்திற்கும் ஈடு செய்துவிட்டது பிர் மரம்—இப்பேர்ப்பட்ட மரம் மாஸ்கோவில் யார் வீட்டிலும் இருந்ததில்லை. இது அசல் தைகாவின் அணி—உயர்ந்து, அடர்ந்து, வளைவு நெளி வின்றி நேரான மரம்; அதன் கிளைகளின் நுனிகள் நட்சத்திரங் கள் போலப் பல முனைகளுடன் திகழ்ந்தன.

* * *

நான்கு நாள்கள் பறந்தன. கடைசியாகப் புத்தாண்டு முன்தினம் வந்தது. காலையிலிருந்தே, சுக்கையும் கெக்கையும் வீட்டுக்குள் வரச் செய்வது முடியவே இல்லை; அவர்களின் மூக்குகள் குளிரினால் நீலம் பாரித்துவிட்டன; ஆயினும் அவர்கள் வெளியிலேயே நின்று கொண்டிருந்தனர்; எந்த நொடியிலும் தந்தையும் அவர் ஆட் களும் வரலாம் என்று எதிர்பார்த்தனர். குளியல் அறைக்குள் வெப்பமூட்டுவதில் முனைந்திருந்த காவற்காரனோ, அவர்கள் வீணாகக் குளிரில் விறைக்க வேண்டாமென்றும், அப்பாவும் மற்றவர்களும் மத்தியானச் சாப்பாட்டு வேளைக்குத்தான் வந்து சேருவார்கள் என்றும் அவர்களிடம் மீண்டும் மீண்டும் கூறியும் பயனில்லை.

அவன் சொன்னது சரியாயிற்று. அவர்கள் மேசையைச் சுற்றி அமர்ந்த உடனேயே காவற்காரன் சன்னல் கண்ணாடியைத் தட்டினான். மளமளவென்று அங்கிகளை மாட்டிக்கொண்டு தாயும் குழந்தைகளும் முன்வாயிலுக்கு ஓடினர்.

''இப்போது கூர்மையாகப் பார்த்துக் கொண்டே இருங்கள். இன்னும் சில நொடிகளில், அப்பெரிய உச்சி முனைக்கு வலப்



பக்கத்தில் உள்ள மலைச்சரிவில் அவர்கள் வருவதை நீங்கள் பார்ப்பீர்கள்; பிறகு அவர்கள் மறுபடியும் காட்டில் மறைவார்கள்; முப்பது நிமிஷங்களுக்கு உள்ளாகவே அவர்கள் வீடு வந்து சேர்வார்கள்'' என்றான் காவற்காரன்.

அப்படித்தான் நடந்தது. மலைப் பிளவிலிருந்து முதலில் ஒரு நாய்க் கூட்டம் வருவது தெரிந்தது; நாய்கள் சுமை நிறைந்த சறுக்கு வண்டியில் பூட்டப்பட்டிருந்தன; அதற்குப் பின், சறுக்குக்கட்டை களின் மீது ஆட்கள் வேகமாக வந்தார்கள்.

மாபெரும் மலைகளுடன் ஒப்பிடும்போது, அவர்கள் மிகவும் சின்னஞ்சிறு உருவங்களாகத் தென்பட்டனர். ஆனால் அவர்களின் கைகள், கால்கள், தலைகள் ஆகியன மிகத் தெளிவாகத் தெரிந் தன.

மரங்களே இல்லாத மலைச்சரிவின் கீழாகத் தத்திச் சறுக்கி,



அவர்கள் காட்டுக்குள் மறைந்தனர். சரியாய் அரைமணி நேரத்தில், குரைத்தல், கூச்சல் இடுதல், சறுக்கு வண்டியின் கிறீச் என்ற ஓசை ஆகிய எல்லாம் மிக அருகாமையில் கேட்டன.

வீடு நெருங்கிவிட்டதை நாய்கள் மோப்பம் பிடித்துத் தெரிந்து கொண்டன. அவற்றிற்கு ஒரே பசி! காட்டிலிருந்து சரேலென்று அவை வெளிவந்தன. அவற்றுக்குப் பின்னால், சறுக்குக்கட்டைகள் அணிந்திருந்த ஒன்பது பேர் விரைந்து வந்து கொண்டிருந்தனர்.

வந்த ஆட்கள், தாயுடன் சுக்கையும் கெக்கையும் முன்வாயிலில் பார்த்துவிட்டு, தமது கழிகளை உயர்த்தி அசைத்துக் காட்டி, ஆரவாரம் செய்தனர்.

கெக்குக்கு மேலும் பொறுத்திருக்க முடியவில்லை; படிகளில் இறங்கி ஓடினான். கம்பளிக் காலணிகள் பனியில் ஆழமாகப் புதைந்தன; அதைப் பாராமல், அவன் தாடியுள்ள நெட்டையனிடம் ஓடினான்; அவர் அந்தக் குழுவின் தலைமையில், மற்றவர்களை விட உரத்த குரலில் முழங்கிக்கொண்டு வந்தார்.

* * *

பிற்பகலில் வந்தவர்கள் முகத்தைச் சிரைத்து குளித்து முடித்து உடைகளை மாற்றிக் கொண்டனர்.

பிறகு மாலையில் அவர்கள் எல்லாரும் களி பொங்கும் புத்தாண்டு விருந்திற்கு ஒன்றுகூடினர்.

உணவு பரிமாறப்பட்டது; விளக்கு அணைக்கப்பட்டு, மெழுகுத் திரிகள் ஏற்றப்பட்டன. ஆனால் சுக்கும் கெக்கும் தவிர, மற்ற எல் லாரும் பெரியவர்கள் ஆதலால், அதற்குப்பின் என்ன செய்வ தென்றே அவர்களுக்குத் தெரியவில்லை.

அவர்களில் ஒருவனிடம் நல்ல காலமாக அக்கார்டியன் என்னும் இசைக்கருவி இருந்தது. அவன் அதைக் கொண்டுவந்து, இசைத்துக் கொண்டே ஓர் இன்ப நடனம் ஆடினான். ஒவ்வொருவரும் துள்ளிக் குதித்து நடனமாடத் தொடங்கினர். அவர்கள் எல்லாரும் மிக



நன்றாக ஆடினர். சிறப்பாகக் குழந்தைகளின் தாயுடன் நடன மாடியபோது மிக நன்றாக நடனமாடினர்.

ஆனால், தந்தைக்கு நடனம் ஆடத் தெரியவில்லை. அவர் மிகவும் பெரியவர், நல்லியல்பு உடையவர்; நடனம் எதுவும் இன்றி அவர் வெறுமே தரையில் நடந்த போதே அலமாரியிலிருந்த பாத்திரங்களெல்லாம் குலுங்கின.

அவர் சுக்கையும் கெக்கையும் தம் முழங்காலில் உட்கார வைத்துக்கொண்டார்; நடனமாடுபவர்களைப் பார்த்து அவர்கள் கைதட்டி ஆரவாரித்தனர்.

நடனம் முடிந்த பின் கெக்கை ஒரு பாட்டுப் பாடும்படி கேட்டனர். கெக் பிகு பண்ணிக்கொள்ளவில்லை. தனக்குப் பாட முடியும் என்று அவனுக்குத் தெரியும்; அதைப் பற்றி அவனுக்குப் பெருமை கூட.

அக்கார்டியன் இசைத்தவன், அவனது பாட்டுக்குப் பக்கவாத்தியம் வாசித்தான். அவன் என்ன பாடினான் என்பது எனக்கு இப்போது நினைவில்லை. ஆனால் அது நல்ல பாட்டு என்பது மட்டும் எனக்கு நினைவிருக்கிறது; ஏனென்றால் அவன் அதைப் பாடியபோது, எல்லாரும் மிக அமைதியாகக் கேட்டனர். மூச்சு விடுவதற்காக அவன் பாட்டைச் சிறிது நிறுத்திய போது மெழுகுத்திரிகள் சுடர்விடும் ஓசையும் வெளியில் காற்றின் முழக்கமும் நன்றாகக் காதில் விழுந்தன.

அவன் பாடி முடித்தவுடனே, எல்லாரும் கைதட்டி ஆரவாரிக்கத் தொடங்கினர். அவர்கள் கெக்கை வாரியெடுத்து, உயரே வீசிப் பிடிக்க ஆசைப்பட்டனர். ஆனால் தாய் அவர்களிடமிருந்து அவனை வெடுக்கெனப் பிடுங்கிக்கொண்டாள்; ஏனென்றால், அவர்கள் தமது களியாட்டத்தில், அவனை முகட்டில் இடித்து விடுவார்கள் என்று அஞ்சினாள்.

அப்பா தம் கைக்கடியாரத்தைப் பார்த்து, ‘‘எல்லாரும் உட்காருங்கள், நிகழ்ச்சி முறையின் முக்கிய பகுதி தொடங்குகிறது’’ என்றார். அவர் உடனே வானொலியைத் திருப்பினார்.

அவர்கள் அனைவரும் அமர்ந்து, மௌனமாகக் காத்திருந் தனர்.

வானொலியில் முதலில் ஒரே அமைதி நிலவியது. பின்பு ஓர்

ஓசை கேட்டது; அதனோடு உர்ரென்ற இரைச்சல் கேட்டது. பிறகு ஏதோ கடகடத்தது, சீறியது. எட்டாத் தொலைவிலிருந்து கிணீர் கிணீர் என்ற இன்ப ஓசை வந்தது.

*தீர்-லில்-லில்லி-டாங்!*
*தீர்-லில்-லில்லி-டாங்!*

என்பது போல ஒரு பல்லவியைப் பெரியவையும் சிறியவையுமான மணிகள் இசைத்தன.

சுக்கும் கெக்கும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். அது என்ன என்பது அவர்களுக்குத் தெரியும். அது மாஸ்கோவிலிருந்து வருகிறது; அங்கு கிரெம்ளினில் ஸ்பாஸ்காயா கோபுரத்தின் செம் மீனத்தின் கீழ் உள்ள பொன் முலாம் பூசிய கடிகாரத்தின் மணி யோசை அது.

அந்த ஓசைகள் புத்தாண்டு வருமுன்—நகரங்களிலும் மலைப் பக்கத்திலும், ஸ்தெப்பி வெளிகளிலும் தைகாக் காட்டிலும், நீலக் கடல்களிலும்—இவ்வாறு ஒவ்வோரிடத்திலுமுள்ள எல்லாருக்கும் கேட்கும்.

அனைவரும் எழுந்து நின்றனர். புத்தாண்டு மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்பதற்காக எல்லாரும் ஒருவரை ஒருவர் வாழ்த்திக்கொண்டனர். ஒரே கொண்டாட்டம்.

அந்த மகிழ்ச்சி எதில் இருக்கிறது என்பது பற்றி அவரவர் தங்களுக்குப் பிடித்த வகையில் கற்பனை செய்துகொண்டனர். ஆனால் ஒன்றுமட்டும் உண்மை: மேன்மை குறையாமல் வாழ வேண்டும், பாடுபட்டு உழைக்க வேண்டும், சோவியத் நாடு என்று பெயர் படைத்த இன்பமான பரந்த நாட்டை நேசித்துக் காக்க வேண்டும் என்பதை எல்லாரும் நன்கு அறிந்திருந்தனர், புரிந்து கொண்டிருந்தனர்.

**1939**

**அன்புக் குழந்தைகளே!**

*இந்நூல் பற்றிய உங்கள் கருத்து என்ன? அடுத்து வரும் வெளியீடுகளுக்கு அது உதவக் கூடும். ஆகவே உங்களது இனிய எண்ணங்களைக் கீழ்வரும் முகவரிக்கு அனுப்புவதை மகிழ்வுடன் வரவேற்கிறோம்:* **Raduga Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, 119859, USSR.**

